## முகவுரை

தமிழ் நாவலர் சரிதை என்னும் இந் நூல், தன் பெயர்க் கிணங்கத், தமிழ்ப் புலவர் சரிதத்தைப் பூரணமாகக் கூறுவதன்று: மற்றுத் தமிழ்ப் புலவருட் சிலர் அவ்வப்போது விநோதமாகவும், தமக்குதவிய வள்ளல்களைப் புகழ்ந்து இசையாகவும், அல்லாதாரை இகழ்ந்து வசையாகவும், தமக்குக் கொடுத்த சமிசையை அமைத்து ஆசுகவியாகவும் பல்வேறு வகையாற் பாடிய பாட்டுக்களைச் சேர்த்துத் தந்து, அவற்றுட் பல பாடப்பட்ட வரலாற்றினையுந் தெரிப்பது. இந் நூல் சிறந்த தமிழ்ப் புலவர் பலருடைய வரலாறுகளைக் கூறு தொழிவது மன்றிப், புலவரென்று சொல்லத் தகாதார் சிலருடைய வரலாறுகளையுங் கூறுகின்றது: இளங்கோவடிகள், மதுரைக் கூலவாணிகன் சாத்தனார், திருத்தக்கதேவர், சேக்கிழார் முதலிய பெரும்புலவர்கள் வரலாறுகளுள் ஒன்றுங் கூறாது, புலமை அமையப் பெறாத திருக்கண்ணபுரத்துத்தாதி, திருவழுந்தூர்த்தாதி முதலிய தாதிகளின் வரலாறுகளையும் பெயருந் தெரியாத புலவர் சிலரின் வரலாறுகளையும் கூறுகின்றது. பாட்டுக்கள் பாடப்பட்ட வரலாறு கூறுகின்றுழியும் சிலவிடத்து அதனைத் தெளியக் கூறாதும், சில விடத்து ஒன்றுமே கூறாதும் செல்கின்றது. இவ்வளவு குறைபாடுடையதேனும், இந்நூலுள் கூறிய வரலாறுகள் சிலவற்றால் இக்காலத்து விளையும் பயன் நோக்கி இதனை வெளியிடலாயிற்று.

கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி, காளமேகம் முதலிய புலவர்களைப் பற்றிய வரலாறு இதனுட் கூறப்பட்

டது இக்காலத்து ஊரில் பயின்று வழங்கும் அவர்களு டைய வரலாற்றோடு எவ்வளவோ மாறுபடுகின்றது. இப்போது வழங்கிவரும் வரலாறுகளெல்லாம் வீராசாமிச் செட்டியார் எழுதிய விநோதரச மஞ்சரியை ஆதாரமாகக் கொண்டன. இந்த விநோதரசமஞ்சரி எழுதி இப்போது ஐம்பது, அல்லது, அறுபது வருடந்தானாகின்றன: தமிழ் நாவலர் சரிதை எழுதியோ இருநூறு, அல்லது, இருநூற் றைம்பது வருடமாகின்றன. எழுத்தில் எழுதப் பட்டு நிலைபெறடையாது கர்ணபரம்பரையாக வழங்கி வருங் கதைகள் காலவடைவில் பலவாறு மாறுபடுவது இயல்பு. ஆதலால், இருநூறு முந்நூறு வருடங்களுக்கு முன் எழுதப்பட்ட வரலாறுகளோடு, இக் காலத்து எழுதப் பட்ட வரலாறுகளாக, கர்ண பரம்பரையாக வழங்கி வரும் வரலாறுகளாக, மாறுபடுமாயின், முன் எழுதப் பட்ட வரலாறுகளே கொள்ளத் தகும் என்பது சொல் லாமே அமையும். ஆகவே, விநோதரசமஞ்சரியிலுள்ள புலவர் வரலாறுகள், தமிழ் நாவலர் சரிதையிலுள்ளவற் றோடு மாறுபடுமவைகளுக்குத் தக்க ஆதாரம் வேறு யாது மின்றேல், அவை கொள்ளப்படாவாம. ஆயினும், இத னால் தமிழ் நாவலர் சரிதையிலுள்ள வரலாறுகள் எல் லாம் உண்மை என்பது போதராது.

ஒரு நிகழ்ச்சி நிகழ்ந்த காலத்திலே எழுதப்பட்ட அதன் வரலாறன்றி, அது நிகழ்ந்து நெடுங்காலமாயின பின் எழுதப்பட்ட வரலாறு முழுதும் உண்மையாய் இருத்தல் சாலாது. நெடுங் காலத்தின் பின் எழுதப் பட்ட வரலாறுகள் பெரும்பாலும் கர்ண பரம்பரையாக வந்த உலக வார்த்தைகளையே ஆதாரமாகக் கொண்ட வைகளாகும். கர்ண பரம்பரையாக வருவன மேற்குறித் தபடி காலவடைவில் மாறுபடுவது இயல்பாதலால், அவற்

றையே ஆதாரமாகக் கொண்ட வரலாறுகள் பலவாறு மாறுபட் டிருக்கு மென்பதும் முற்றும் உண்மையாகா வென்பதும் நன்கு விளங்கும். ஒரு நிகழ்ச்சி நிகழ்ந்த காலத்துக்கும், அதன் வரலாறு எழுதப்பட்ட காலத்துக்கும் இடையில் சென்றகாலம் எவ்வளவு நெடிதோ அவ்வளவு அவ்வரலாறுகளும் மாறுபாடுகள் செறிந்தனவா யிருக்கும். காலஞ் செல்லச் செல்ல இயற்கையான நிகழ்ச்சிகள் மறைந்து போக, அவற்றினிடத்தில் இயற்கைக்கு மாறுயுள்ள அற்புதமான நிகழ்ச்சிகள் வந்து தோன்றும். இந்த உண்மை இந்நூலின் முற்பகுதியில் கூறப்படும் வரலாறுகளோடு பிற்பகுதியில் கூறப்படும் வரலாறுகளை ஒப்புநோக்கின் நன்கு புலப்படும். நக்கீரர், அவ்வையார், பொய்யாமொழியார், கம்பர் முதலியபுலவர்களின் வரலாறுகள் இந்நூலிற் கூறப்பட்டன அற்புதமான நிகழ்ச்சிகள் செறிந்தனவா யிருக்க, காளமேகம், தத்துவப் பிரகாரர், கவிராசபிள்ளை, கவி வீரராகவ முதலியார் முதலிய புலவர்களின் வரலாறுகள் இயற்கைக்குச் சிறிதும் மாறுபடா தவைகளாயிருக்கின்றன.

இனி இந் நூலுட் கூறப்பட்ட வரலாறுகளுள் வேறு காரணம்பற்றிக் கொள்ளப்படாதனவும் உள. அவற்றுட் சில வருமாறு :—

அவ்வையாருடைய வரலாற்றில் —

I. பாரிமகளிர் அங்கவை சங்கவையைத் தெய்வீகனுக்குக் கலியாணம் பண்ணுவிக்கிறபோது, விநாயகரை அழைத்து மூவேந்தருக்கும் ஓலை எழுதுவித்த செய்தியும், அவர்கள் வந்தபோது பனந் துண்டத்தைப் பழந்தரப் பாடிய செய்தியும் மக்களாற் செய்யப்படாத அற்புதமான செயல்களா யிருப்பது மல்லாமல், அப்போது பாடப்பட்டனவாகக் கூறப்படும் செய்யுள்களும் அவ்வையார் பாடி

பனவென்று சொல்லுதற் கேலாதனவாகவா யுள்ளன. அவ்வையார் சங்க காலத்தில் இருந்தவர். அக் காலத்தில் சகர முதன் மொழி (சகரத்தை முதலெழுத்தாக வுடைய மொழி) தமிழிற் பயின்று வழங்கவில்லை. உண்மையாக அவ்வையார் பாடியனவாகக் கொள்ளக்கூடிய செய்யுள்கள் தொகை நூல்களுள் வருவனவற்றுள்ளும் சகர முதன் மொழி பயின்று வரவில்லை. அவ்வையார் பாடியனவாகப் புறநானூற்றில் வரும் முப்பத்து மூன்று செய்யுள்களில் சமம், சகடம் என்னும் இரண்டு சகர முதன் மொழிகள் தான் காணப்படுகின்றன. குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு முதலிய தொகை நூல்களில் வரும் அவ்வையார் பாட்டுக்களில் சகர முதன் மொழி ஒன்றுமில்லை. அங்ஙனமாகவும், மேற் குறிக்கப்பட்ட சந்தர்ப்பங்களில் அவ்வையார் பாடியனவாக இந் நூலுள் வரும் செய்யுள்களில் "தன்னுண்மை தீர்ப்பேன் சபித்து," "சங்கியாதே வாருந்தான்," "சங்கோக்க வெண்குருத் தின்று சலசலத்து" எனச் சகர முதன் மொழிகள் பல வந்துள்ளன. இம் மொழிகளுள் 'சபித்து,' 'சங்கியாது' என்பன 'சாபம்,' 'சங்கை' என்னும் வடமொழி யடியாகப் பிறந்தன. இவ்வாறு வடமொழி யடியாகப் பிறக்கும் வினைகள் தமிழில் வழங்கலுற்றது மிகவும் பிற்காலத்தில்; சங்க காலத்தி லன்று. இவ்வித வினைகளைப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலிய சங்க நூல்களில் காண்பது அரிது. 'சங்கு' என்ற சொல்லும் சங்க நூல்களில் வரவில்லை. ஆகவே, இப் பாட்டுக்கள், சகர முதன் மொழியும் வடமொழி யடியாகப் பிறக்கும் வினைகளும் தமிழில் வந்து வழங்கலுற்ற பின்பு, பிற்காலத்தவர்களால் பாடப்பட்டனவே யன்றி, அவ்வையாரால் பாடப்பட்டனவல்ல.

இனி அவ்வையார் பாரிமகளிரைத் தெய்வீகனுக்கு மணஞ்செய்துவைத்தார் என்ற கதையும் கொள்ளத் தக்க தன்று: பாரிமகளிர் வரலாறு சங்க காலத்து நூலாகிய புறநானூற்றில் கூறப்பட்டதனோடு மாறுபடுதலின். அவ் வரலாறு யாதெனின், மகண்மறுத்தல் காரணமாகப் பாரி யொடு பகைத்த மூவேந்தரும் அவன் பறம்பு மலையை முற்றி அவனையும் வஞ்சித்துக் கொன்றதன்பின், பாரியின் நண்பராகிய கபிலர், அவன் மகளிரை அழைத்துக் கொண்டு விச்சிக்கோனையும் இருங்கோவேளையுஞ் சென்று அவர்களை மணஞ்செய்துகொள்ளும்படி வேண்டி, அவர் மறுத்த பின், அம் மகளிரைப் பார்ப்பாருக்கு மணம் புணர்வித்தனர் என்பது.

2. சோழன் ஒரு துகிலைப் பார்த்துப் பராக்கா யிருப்ப, அப்போது பாடியதாகக் கூறப்படும் "நூற்றுப் பத்தாயிரம் பொன் பெறினும்" என்றற் றொடக்கத்துச் செய்யுளும் அவ்வையார் பாடினதாகமாட்டாது. அப் பாட்டில் சோழனை "அகளங்கா" என்று விளிக்கப்பட் டுளது. அகளங்கன் என்பது முதலாங் குலோத்துங்க சோழன் மகன் விக்கிரம சோழனுக் குரியபெயர். அகளங் கன் என்பது விக்கிரம சோழனைக் குறித்தலை இந்நூலில் 117, 120, 121, 123, 129-ம் செய்யுள்களிற் காண்க. விக்கிரமனுக்கு முன்னிருந்த சோழர்களுக்காவது பின்னர் வந்த சோழர்களுக்காவது அகளங்கன் என்னும் பெயர் வழக்கு இல்லை. பிற்காலத்துப் புலவர்கள் சோழனைப் பொதுவாக அகளங்கன் என்று சொல்லி யிருக்கலாம். ஆயினும், அது விக்கிரமனல்லாத மற்றைய சோழர்க ளுக்கு ஒரு விருதுவாக வழங்கவில்லை. விக்கிரமசோழன் கி. பி. 1118-ம் ஆண்டு தொடுத்து, 1143-ம் ஆண்டு வரை அரசு செய்தவன். அக் காலத்துக்குப் பல நூற்றாண்டுக

ளுக்குமுன் சங்க காலத்திலிருந்த அவ்வையார் அவனைப் பாடினாரென்பது பொருந்தாது.

3. சேரன் கைலைக்குப் போகிறபோது, அவ்வையாரை அழைக்க, அவர் விநாயக பூசை பண்ணிக்கொண்டிருந்தமையால் உடன் செல்லாது, பின்னர் அப் பூசை முடிந்தபின் விநாயகர் துதிக்கையா லெடுத்துக் கைலையில் விடச் சேரனைக் கண்டு பாடியதாகக் கூறப்படும் அற்புதமான செய்தியும் அவ்வையார் காலத்து நிகழ்ந்ததொன்றாகாது. இங்கே சேரனென்று குறிக்கப்பட்டவர் சேரமான்பெருமாணாயனார். இவர் சுந்தரமூர்த்தி நாயனாரோடு கைலைக்குச் சென்றது பெரியபுராணத்துட் கூறப்பட்டது. சுந்தரமூர்த்தி நாயனார் காலம் ஒன்பதாம் நூற்றாண்டாதலால், சேரமான் பெருமாணாயனார் காலமும் அதுவேயாகும். ஆகவே, ஒன்பதாம் நூற்றாண்டி லிருந்த சேரமான் பெருமாணாயனாரோடு அவருக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன் சங்க காலத்திருந்த அவ்வையார் கைலைக்குச் சென்றாரென்றல் பொருந்தாது. அன்றியும் அவ்வையாரைப் பற்றிப் பெரிய புராணம் ஒன்றும் கூறாததனால், அவ்வையார் சேரமானோடு கைலை சென்ற கதை பெரிய புராணம் பாடிய காலத்து வழக்கிலில்லை என்றும் அதன் பின்னரேயே தோன்றியிருக்க வேண்டுமென்றும் கொள்ளல் வேண்டும். இன்னும், கைலையில் சேரனைக் கண்டு அவ்வையார் பாடியதென்று சொல்லப்படும் "மதுரமொழியி லுமையாள் சிறுவன்" என்றற் றொடக்கத்துச்செய்யுளில் வரும் 'கிழவி' என்னும் பதத்திற்குச் சங்ககாலத்தில் 'உரியவள்' என்னும் பொருளேயன்றி, 'வயது முதிர்ந்தவள்' என்னும் பொருளின்மையும் அப்பாட்டுச் சங்ககாலத்துப் பாட்டன்று என்பதை நன்றாகத் தெரிவிக்கும்.

பாரிமகளிர் அங்கவை சங்கவைக்குக் கலியாணம் பண்ணுவிக்கிறபோது "கண்ணுல வோலை கடிதெழுத மாராேனல்—தன்னுண்மை தீர்ப்பேன் சபித்து" என்று தன்னால் அச்சுறுத்தப்பட்ட விநாயகரை அவ்வையார் இங்கே பூசை செய்துகொண்டிருந்தார் என்பது விநோதமாயுள்ளது!

4 ஒருவனைப் பாடி அவன் ஒன்றுமில்லை என்றபோது பாடிய தெனப்படும் "கல்லாத ஒருவனை நான்கற்றேன் என்றேன்" என்றற்றொடக்கத்து விருத்தமும் அவ்வையார் பாடினதாகாது. அவ்வையாரிருந்த காலத்தில் இவ்வகை விருத்தம் தமிழில் வழங்கவில்லை. விருத்தம் வடமொழியிலிருந்து தமிழில் வந்தது. அவ்வாறு வந்தது ஆறும் ஏழாம் நூற்றாண்டிலாதல் வேண்டும். பழைய இலக்கணமாகிய தொல்காப்பியத்தில் விருத்தத்துக்கு இலக்கணம் கூறப்படவில்லை "கல்லாத ஒருவனை" என்னும் இந்தப் பாட்டைச் சிலர் இராமச்சந்திரக் கவிராயர் பாட்டென்பர். இக் கவிராயர் சென்னையில் ஐம்பது, அறுபது வருடங்களுக்கு முன் வசித்தவராதலின், இவர் பாட்டு இருநூறு, அல்லது, இருநூற்றைம்பது வருடங்களுக்குமுன் தொகுக்கப்பட்ட தமிழ்நாவலர் சரிதையில் வருதற்கிடமில்லை.

ஏனைய புலவர் வரலாறுகளுள்ளும் இவ்வாறு கொள்ளப் படாதன சில வுள. அற்றை எல்லாம் எடுத்துரைக்கப் புகின் இம் முகவுரை பெரிதும் விரியுமாதலினாலும், இங்கே கூறிய நியாயங்களைக்கொண்டு அவற்றை உய்த்துணர்ந்துகொள்ள வியலுமாதலினாலும் அவைகள் விரிக்காது விடப்பட்டன.

இனி இந்நூலுட் கூறப்பட்ட வரலாறுகளுள் இக் காலத்து மாறுபட வழங்குவன சில வருமாறு:—

கம்பர் வரலாற்றில்

1. "ஆழியான் பள்ளியணையே" என்றற் றொடக்கத்துப் பாட்டுக் கம்பர் எழுபது பாடி அரங்கேற்றும் போது புதுவைச் சேதிராயனை விடந்தீண்டத் தீர்த்த பாட்டென்று இந்நூல் கூறுகின்றது. இக்கதை "அழுவதுங் கொண்டு புலம்பாது நஞ்சுண் டதுமறைத் தேர்—எழுபதுங் கொண்டு புகழ்க்கம்ப நாடனெழுப்ப" எனத் தொண்டைமண்டலசதகத்திலும், "பாவலர்தாம்—எழுபதோ டரங்கேற்றுங் கவிரியிலே—காரிவிட நாகங் கடிக்குங்கை" எனத் திருக்கை வழக்கத்திலுங் கூறப்பட்டுளது. இவைகளினால் திருக்கைவழக்கம் பாடின காலத்தும், தமிழ் நாவலர் சரிதை எழுதின காலத்தும், தொண்டைமண்டலசதக மியற்றின காலத்தும் வழங்கி வந்த கதை எழுபது பாடி அரங்கேற்றுங் காலத்து ஒருவரை விடந் தீண்ட அதனைக் கம்பர் தீர்த்தாரென்பதுவே என்பது நன்கு விளங்குகின்றது. இக்கதை இப்போது மாறுபட்டுக் கம்பர் தில்லைவா ழந்தணரிடத்துத் தமது இராமாயணத்துக்குச் சாற்றுக்கவி வாங்கப் போயிருந்தபோது, அவர்களுடைய பிள்ளையொன்று பாம்புகடித் திறந்துவிடக், கம்பர் இப்பாட்டைப்பாடி விடத்தைத் தீர்த்துப் பிள்ளையை எழுப்பினரென்று வழங்குகின்றது (விநோதரச மஞ்சரி பார்க்க). இக்கதை காலவடைவில் இவ்வாறு மாறுபட்டதென்பதற்கு ஐயமேயில்லை. விநோதரசமஞ்சரியில் எழுதப்பட்ட கதைகளெல்லாம் விநோதமேயன்றி உண்மையல்ல என்பதற்கு இஃது ஒரு சான்றாகின்றது.

2. "இன்றோநங் கம்பனிறந்த நாள்" என்றற் றொடக்கத்துப் பாட்டுக் கம்பர் பேரிற்பாடிய கையறம் என்று மாத்திரம் இந்நூல் கூறுகின்றதன்றி, யாராற் பாடப்பட்டதென்று கூறவில்லை. இக்காலத்தில் இது ஒட்டக்கூத்த

ரால் பாடப்பட்டதென்று வழங்குகின்றது. இதனை ஒட்டக்கூத்தர் பாடினென்பதற்கு ஓராதாரமும் இல்லை. கம்பரும் ஒட்டக்கூத்தரும் வெவ்வேறு காலத்திருந்தவர் என்பது இந்நூலியற்றினார் கொள்கையாகும். தமிழ்ப் புலவர் சரிதங்களைப் பெரும்பான்மை காலமுறைப்படி ஒழுங்கு படுத்திக் கூறும் இவ்வாசிரியர் ஒட்டக்கூத்தர் வரலாற்றைக் கம்பர் வரலாற்றுக் கடுத்துக் கூறாது, தொல்காப்பிய தேவர், இரட்டையர், சயங்கொண்டான் என்னும் மூவர் வரலாறு கூறி, அதன்பின் அவ் வரலாற்றைக் கூறியமையே இதற்குத் தக்க சான்றாகும்.

இந்நூலுட் கூறப்பட்ட வரலாறுகளுள் இப்போது மறந்து போனவைகளும் சில உள. அவற்றுள் முக்கியமானது புகழேந்திப் புலவர் இலங்கை சென்ற வரலாறு. இந்நூலில் வரும் 143, 144, 145, 146, 148-ம் செய்யுள்களால், புகழேந்திப் புலவர் இலங்கையிலுள்ள கண்டி, கொழும்பு, கதிர்காமம் முதலிய ஊர்களுக்குப் போனதும், இலங்கை யரசனாகிய சிங்கையாரிய சேகரனைப் பாடினதும், அவனிடத்தில் கடகம் யானையும் ஆயிரம் பொன்னும் பரிசு பெற்றதும், கதிர்காமத்தில் சுப்பிரமணியக் கடவுளையும், கொழும்பில் ஆரோடன் மைந்தனாகிய ஓடக்காரனையும் பாடியதும் நன்கு பெறப்படும்.

இனி இந்நூலை இயற்றினார் யாவரென்பது ஒருவாற்றானும் புலப்படவில்லை. அவர் சமயத்தாற் சைவர் என்பது இந்நூலின் காப்புச் செய்யுளாலும், இறையனாரும் முருகவேளும் பாடிய பாட்டுக்களை நூன் முதலில் வைத்திருப்பதனாலும் விளங்குகின்றது. அவர், தமது நூலை அந்தகக்கவி வீரராகவருடைய வரலாற்றோடு முடித்து, அக்கவிஞருக்குப் பின்வந்த புலவர்களுள் ஒருவர் வரலாறும்

கூறுததால், அவரிருந்தது 'கவி' வீரராகவருக்குச் சிறிது காலத்துக்குப் பின் என்று கருதலாகும். கவி வீரராகவர் யாழ்ப்பாணத்தில் அரசாண்ட பரராசசேகரன் காலத்தவர். பரராசசேகரன் யாழ்ப்பாணத்தில் அரசாண்டது பதினாறாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில். ஆகவே, கவி வீரராகவரிருந்து இப்போது முந்நூற்றைம்பது வருடங்கள் வரையிலாகின்றன. இந்நூலியற்றினது கவி வீரராகவர் காலத்துக்கு நூறுவருடத்துக்குப் பின் என்று கொண்டாலும், இந்நூலியற்றினார் காலம் இற்றைக்கு இருநூற்றைம்பது வருடத்துக்கு முற்பட்டதாகும்.

இந்நூலில் வரும் பாட்டுக்கள் பலவற்றிற்கு இயன்றவரை குறிப்புக்கள் எழுதப்பட்டுள்ளன. பாட்டுக்களில் குறிக்கப்பட்ட இடங்களையும் மக்களையும் பாட்டுப் பாடின புலவரிருந்த காலத்தையும் விளக்குவதே குறிப்புக்களின் நோக்கமாகும். குறிப்புக்களெல்லாம் பூரணமானவை என்பதில்லை; குறைவுள்ளன பல. பாட்டுக்களில் குறிக்கப்பட்ட இடங்கள் முதலியவற்றுள் விளங்காதனவும் பலவுள. இவற்றுள் தமக்குத் தெரிந்தவற்றை இந்நூலை வாசிப்பவர் எழுதி அறிவிப்பாராயின், அவை வந்தனத்தோடு ஏற்கப்பட்டு மறுபதிப்பில் உரிய விடங்களில் சேர்க்கப்படும். காளமேகப் புலவர் காலம் இதுவென்று இதனுள் சிறிதும் ஐயத்துக்கிடமின்றி நிர்ணயிக்கப்பட்டுள்ளது யாவரும் அறியத்தக்கது.

சென்னை,<br>ரௌத்திரி ௵ } திரு. த. க.

# தமிழ் நாவலர் சரிதை

## கடவுள் வாழ்த்து

மதிபாய் சடைமுடித்த மாசுணைப் பைம்பூட்டுச்
சதிபாய் துறந்தாட்டுத் தான — நதிபாய்
இருகவுட்டு முக்கட்டு நால்வாய்த் தென்னுள்ளம்
உருகவிட்டு நின்ற வொளி.

குறிப்பு. இது [illegible] ண்டின் காப்பு. முன்வருவதுதான் தமிழ் நாவலர் சரிதை எழுதினோர் இயற்றியது.

தனிமை பெறுசீர்த் தமிழ்நா வலர்சீர்
இனிமை பெறச்சேர்த் தெழுத — நனிதுணையாம்
இந்துமுகத் தந்தி யெனுஞ்செஞ் சடைமவுலி
ஐந்துமுகத் தந்தி யடி.

## நூல்

தலைச்சங்கத்தார் இடைச்சங்கத்தார் கடைச்சங்கத்தார் எனப் புலவர் மூவகையர். அவருள் தலைச்சங்கமிருந்தார் அகத்தியனாரும் இறையனாரும் முருகவேளும் நிதியின்கிழவனும் முரிஞ்சியூர் முடிநாகராயரும் என்று இத்தொடக்கத்தார் ஐஞ்ஞாற்று நாற்பத்தொன்பதின்மர். அவருள்ளிட்டு நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினார். அவர்க-

ளாற் பாடப்பட்டன * நூறு பரிபாடலும் முதுநாரை-யும் முதுகுருகும் களரியாவிரையும் என இத்தொடக்-கத்தன. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது நாலா-யிரத்து நானூற்று நாற்பத்தொன்பதி யாண்டு. அவர்-க்கு நூல் அகத்தியம்.

இடைச்சங்க மிருந்தார் அகத்தியனாரும் தொல்-காப்பியனாரும் இருந்தையூர்க் கருங்கோழி மோசியும் வெள்ளூர்க் காப்பியனாரும் சிறுபாண்டரங்கனும் மது-ரையாசிரியன் † மாறனும் துவரைக்கோமானும் என இத் தொடக்கத்தார் ஐம்பத் தொன்பதின்மர். அவ-ருள்ளிட்டு மூவாயிரத் தெழுநூற்றுவர் பாடினார். அவர் களாற் பாடப்பட்டன கலியும் குருகும் வெண்டாளி-யும் வியாழமாலையகவலும் என இத்தொடக்கத்தன வென்ப. அவர்க்கு நூல் அகத்தியமும் மாபுராணமும் இசை நுணுக்கமும் தொல்காப்பியமும் ‡ பனம்பார-மும் என்ப. அவர் மூவாயிரத் தெழுநூற்றியாண்டு கபாடபுரத் திருந்தார். அப்பொழுது மதுரையைக் கடல்கொண்ட தென்ப.

கடைச்சங்கமிருந்தார் கபிலரும் பரணரும் சிறு மேதாவியரும் சேந்தம்பூதனாரும் அறிவுடையரனாரும் பெருங்குன்றூர் கிழாரும் இளந்திருமாறனும் மதுரை யாசிரியர் நல்லந்துவனாரும் மதுரை மருதனிளநாகனா-ரும் கணக்காயனார் மகனார் நக்கீரரும் என இத் தொட-க்கத்தார் நாற்பத் தொன்பதின்மர். அவருள்ளிட்டு நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினார். அவராற்

* நூல் என்றும் பாடம்.

† துரையன் என்றும், மதுரையின் என்றும் பாடம்.

‡ பண்டிபாரம் என்றும் பாடம்.

பாடப்பட்டன குறுந்தொகையும் நற்றிணைநானூறும் அகநானூறும் புறநானூறும் ஐங்குறுநூறும் பதிற்றுப் பத்தும் பத்துப்பாட்டும் முத்தொள்ளாயிரமும் கூத்-தும் வரியும் சிற்றிசையும் பேரிசையும் எழுபது பரி-பாடலும் பாரதவெண்பாவும் என இத்தொடக்கத்தன. அக்காலத்து நூல் அகத்தியமும் தொல்காப்பியமும். அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது ஆயிரத்தெண்-ணூற் றைம்பதிற்றியாண்டு.

அக்காலத்துப் பாண்டியனாடு பன்னீராண்டு மழை பெய்யாது வற்கடஞ் சென்றது. சங்கத்தா ரெல்லா-ரும் வேறு வேறிடத்துப் போயினர். பின்பு மழை பெய்து நாடு விளைய அவரெல்லாரையும் மதுரையிடத் தழைப்பித்துத் தமிழாராய்ந்தார். பொருளதிகாரங் காணமற் போனதால் ஆலவாயிறையனார் அறுபது சூத்திரம் பாடினார்.

கு-பு. சில பிரதிகள் நெடுந்தொகை, களிற்றியானைநிரை, மணிமிடைபவளம், நித்திலக்கோவை என்பவைகளையும் கடைச் சங்கத்தாரால் பாடப்பட்ட நூல்களாகக் கூறுகின்றன. நெடுந்-தொகை என்பது அகநானூற்றின் மறுபெயராதலாலும் களிற்றி-யானைநிரை முதலிய மூன்றும் அகநானூற்றின் பாகங்களுக்குப் பெயராதலாலும் அவை நீக்கப்பட்டன. கடைச்சங்கத்து நூலா-கிய கலித்தொகை இங்குக் கூறப்படவில்லை.

## இறையனார்

தருமி யென்னும் பிரமசாரிக்குப் பொற்கிழி வாங்-கிக் கொடுத்த சிந்தாசமத்தி:

அகவல்

கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்

செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவு முளவோ நீயறியும் பூவே. (க)

கு-பு. இது குறுந்தொகை இரண்டாம் பாட்டு.

பாணபத்திரனுக்காகச் சொக்கநாத சுவாமி சேர-
மான் பெருமாளுக்கு எழுதிய திருமுக

அகவல்

மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவிய பானிற வரிச்சிறை
அன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
கொருமையி னிருமையு முதவிய வொளிதிகழ்
குருமா மணிநிரைக் குடையத னிழற்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பா லியாழ்பயில் பாண பத்திரன்
தன்போ லென்பா லன்பன் றன்பாற்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே. (உ)

கு-பு. இது பதினொன்றாந் திருமுறையில் வரும் பிரபந்தங்-
களுள் முதலாவது.

வள்ளுவரைச் சங்கத்தார் பாடிய வள்ளுவமாலையில்
இறையனார் பாடிய

வெண்பா

என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினும்
நின்றலர்ந்து தேனிறைக்கு நீர்மையவாய்க் — குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் செவ்வித் திருமலர்போன்ம்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்.

கு-பு. தேனிரைக்கும் என்றும் பாடம்.

இறையனார் பொய்யாமொழிப்புலவர்முன்பு சிரா-
மலையைப் பாடிய வெண்பா

கோட்டாற் கொழும்பிரசங் குத்தி யதனடுவே
பாட்டாற் பனைக்கை புகமடுத்துக் — காட்டானை
தேனீ ரருந்துஞ் சிராமலையே செஞ்சடைமேல்
வானீர் கரந்தான் மலை. (௪)

கு-பு. பாட்டார் என்றும் பாடம்.

## முருகவேள்

முருகவேள் பொய்யாமொழியாரைப் பாடிய

வெண்பா

விழுந்த துளி யந்தரத்தே வேமென்றும் வீழ்ந்தால்
எழுந்துசுடர் சுடுமென் றேங்கிச் — செழுங்கொண்டல்
பெய்யாத கானகத்தே பெய்வளையும் போயினாள்
பொய்யா மொழிபகைஞர் போல். (௫)

## நாமகள்

வள்ளுவமாலையில் நாமகள் பாடிய

வெண்பா

நாடா முதனான் மறைநான் முகனாவிற்
பாடா விடைப்பா ரதம்பகர்ந்தேன் — கூடாரை
எள்ளுவன் மீனுயர்த்த வேந்திலைவேல் வேந்தனே
வள்ளுவன் வாயதென் வாக்கு. (௬)

## நக்கீரர்

நக்கீரர் நாடத்துக் குயக்கொண்டானைச் சாகப்
பாடிய அங்கத வெண்பா

முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி
பரணர் கபிலரும் வாழி — அரணிலா [டான்
ஆனந்த வேட்கையான் வேட்கோக் குயக்கொண்
ஆனந்தஞ் சேர்கசுவா கா. (௭)

அவனைப் பிழைக்கப் பாடிய

வெண்பா

ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தாற் காலக்கோட் பட்டானைச் — சீரிய
அந்தண் பொதியி லகத்தியனா ராணையினாற்
செந்தமிழே தீர்க்கசுவா கா.

கு - பு. இவ்விரண்டு வெண்பாக்களையும் தொல்காப்பியப் பொருளதிகாரச் செய்யுளியலில் வரும் 'மறைமொழி மாந்தர் ஆணை' என்ற சூத்திரத்தின் உரையில் அங்கதப்பாட்டிற் குதாரணமாக எடுத்துக் காட்டி, 'இச்செந்தமிழ்ப் பாண்டியன் வாயில்திறவாத பட்டி மண்டபத்தார் பிழைபட்டதனைத் திருவள்ளுவன் வாழ்வும் ஒருவன் அவன் பாடிய கூறிப் அங்கதப்பாட்டாயின' என்பர் பேராசிரியர்.

## கபிலர்

பாரியின் கோட்டையையும் மலையையும் சேரனும் சோழனும் பாண்டியனும் வளைத்ததின் பிறகு, அவர்கள் மூவரும் வலியக் கூடாரம் பிடுங்கிக் கொண்டுபோகக் கபிலர் பாடிய

அகவல்

அளிதோ தானே பாரியது பறம்பே
நளிகொண் முரச மூவிரு முற்றினும்
உழவ ருழாதன நான்குபய னுடைத்தே
ஒன்றே, சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே
இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க் கும்மே
மூன்றே, கொழுங்கொடி வள்ளி கிழங்குவீழ்க் கும்மே
நான்கே, அணிநிற வோரி பாயமீ தழிந்து
திணிநெடுங் குன்றந் தேன்சொரி யும்மே
வான்க ணற்றவன் மலையே வானத்து
மீன்க ணற்றதன் சுனையே யாங்குப்

புலந்தொறும் பரப்பிய தேரினி ராயினும்
மரந்தொறும் பிணித்த களிற்றினி ராயினும்
தாளிற் கொள்ளலிர் வாளிற் றாரலன்
யானறி குவனது கொள்ளு மாறே
சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி
விரையொலி கூந்தனும் விறலியர் பின்வர
ஆடினிர் பாடினிர் செலினே
நாடுங் குன்று மொருங்கீ யும்மே. (௯)

மலையமான் திருமுடிக்காரியை வரிசையறியாது கொடுக்க இடத்துக் கபிலர் பாடியது:—

அகவல்

ஒருதிசை யொருவனை யுள்ளி நாற்றிசைப்
பலரும் வருகுவர் பரிசின் மாக்கள்
வரிசை யறிதலோ வரிதே பெரிதும்
ஈத லெளிதே மாவண் டோன்றல்
அதுநற் கறிந்தனை யாயிற்
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே. (௧௦)

(புறம் - ௧௨௧)

கபிலர் பிறந்தபோது பாடியது:—

அகவல்

நெட்டிலை யிருப்பை வட்ட வான்பூ
வாடா தாயிற்
பீடைப் பிடியின் கோடேய்க் கும்மே
வாடிலோ
பைந்தலைப் பரதர் மனைதொறு முணங்குஞ்
செந்தலை யிறவின் சீரேய்க் கும்மே. (௧௧)

## பெருந்தலைச் சாத்தனார்

தம்பியால் நாடு கொள்ளப்பட்டுக் காடுபற்றி யிருந்த குமணனைப் பெருந்தலைச் பாடியது :—

ஆடுநனி மறந்த கோடுய ரடுப்பின்
ஆம்பி பூப்பத் தேம்புபசி யுழவாப்
பாஅ லின்மையிற் றோலொடு திரங்கி
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுக நோக்கி
நீரொடு நிறைந்த வீரிதழ் மழைக்கணென்
மனையோ ளெவ்வ நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண
என்னிலை யறிந்தனை யாயி னிந்நிலைத்
தொடுத்துங் கொள்ளா தமையலெ னடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணார் முழவின் வயிரியர்
இன்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே. (க௨)

இதுவுமது :—

ஆறுபெருக் கில்லா தருந்திடர்தான் பட்டாலும்
ஊறலைமை யாதோ வுலகாற்றத் — தேற
வறியையே யானு மென்வறுமை தீர்க்கச்
சிறியையோ சீர்க்குமண செப்பு. (க௩)

இந்தப் பாட்டுக்குக் குமணன் தலை கொடுத்தது.

## கோவூர்கிழார்

உறையூர் முற்றியிருந்த நலங்கிள்ளியையும் அடைத்திருந்த நெடுங்கிள்ளியையுங் கோவூர்கிழார் பாடியது:-

இரும்பனை வெண்டோடு மலைந்தோ னல்லன்
கருஞ்சினை வேம்பின் றெரியலோ னல்லன்
நின்ன கண்ணியு மார்மிடைந் தன்றே, நின்னொடு
பொருவோன் கண்ணியு மார்மிடைந் தன்றே
ஒருவீர் தோற்பினுந் தோற்பதுங் குடியே
இருவீர் வேற லியற்கையு மன்றே, அதனாற்,
குடிப்பொரு ளன்றுநுஞ் செய்தி கொடித்தேர்
நும்மோ ரன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி யுவகை செய்யுமிவ் விகலே.

சோழன் நலங்கிள்ளியுழைநின்று உறையூர் புக்க இளந்தத்தனை நெடுங்கிள்ளி ஒற்றுவந்தானென்று கொல்லப் புக்குழிக்கோவூர்கிழார் பாடி உய்யக்கொண்டது:—

வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி
நெடிய வென்னாது சுரம்பல கடந்து
வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்
பெற்றது மகிழ்ந்து சுற்ற மருத்தி
ஓம்பா துண்டு கூம்பாது வீசி
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் தீதறிந் தன்றோ வின்றே, திறப்பட
நண்ணார் நாண வண்ணாந் தேகி

ஆங்கினி தொழுகி னல்ல தோங்குபுகழ்
மண்ணாள் செல்வ மெய்திய
நம்மோ ரன்ன செம்மலு முடைத்தே. (கரு)

குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மலயமான் மக்களை யானைக்கிடுவுழிக் கோவூர்கிழார் பாடி உய்யக்கொண்டது:—

நீயே, புறவினல்ல லன்றியும் பிறவும்
இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை
இவரே, புலனுழு துண்மார் புன்க ணஞ்சித்
தமது பகுத்துண்ணுந் தண்ணிழல் வாழ்நர்
களிறு கண்டழூஉ மழாஅன் மறந்த
புன்றலைச் சிறாஅர் மன்று மருண்டு நோக்கி
விருந்திற் புன்கணோ வுடையர்
கேட்டனை யாயினீ வேட்டது செய்ம்மே. (கசு)

(புறம் - சசு)

## சாத்தந்தையார்

இது கோப்பெருநற்கிள்ளி முக்காவனாட்டு ஆமூர் மல்லனைப் பொருதட்டு நின்றானைச் சாத்தந்தையார் பாடியது:-

சாறுதலைக் கொண்டெனப் பெண்ணீற் றுற்றெனப்
பட்டமாரி ஞான்ற ஞாயிற்றுக்
கட்டி னிணக்கு மிழிசினன் கையது
போழ்தூண் டூசியின் விரைந்தன்று மாதோ

ஊர்கொள வந்த பொருநனோ
டார்புனை தெரிய னெடுந்தகை போரே. (கஎ)

## சங்கத்தார்

பாண்டியன் வற்கடகாலத்து நம்மைத் தாங்கி-யோர் யாரென்றவற்குச் சங்கத்தார் பாடியது:-

காலை ஞாயிறு கடுங்கதிர் பரப்பி
வேலையுங் குளனும் வெடிபடச் சுவறித்
தந்தையை மக்கள் முகம் பாராமல்
வெந்த சாகம் வெவ்வே றருந்திக்
குணமுள தனையுங் கொடுத்து வாழ்ந்த
கணவனை மகளிர் கண்பா ராமல்
விழித்த விழியெல்லாம் வேற்றுவிழி யாகி
அறவுரை யின்றி மறவுரை பெருகி
உரைமறந் தொழிந்த வூழி காலத்தில்
தாயில் லவர்க்குத் தாயே யாகவுந்
தந்தையில் லவர்க்குத் தந்தையே யாகவும்
இந்த ஞாலத் திடுக்கண் டீர
வந்து தோன்றினன் மாநிதிக் கிழவன்
நீலஞ் சேரு நெடுமால் போல்வன்
ஆலஞ் சேரி யயிந்த னென்பான்
தன்குறை சொல்லான் பிறர்பழி யுரையான்
மறந்தும் பொய்யான் வாய்மையுங் குன்றான்
இறந்து போகா தெம்மைக் காத்தான்
வருந்தல் வேண்டாம் வழுதி
இருந்தன மிருந்தன மிடர்கெடுத் தனனே

## திருவள்ளுவர்

திருவாலங்காட்டுத் திருநடங் கண்டீரோ வென்று முனிவர் கேட்க வள்ளுவர் பாடியது :—

வெண்பா

பூவி லயனும் புரந்தரனும் பூவுலகைத்
தாவி யளந்தோனுந் தாமிருக்க — நாவில்
இழைநக்கி நூனெருடு மேழையறி வேனோ
குழைநக்கும் பிஞ்ஞகன்றன் கூத்து. (௧௯)

## அவ்வை

அவ்வையார் தமக்கு நெல்லிப்பழங் கொடுத்த அதிகமானைப் பாடிய

அகவல்

வலம்படு வாய்வா ளேந்தி யொன்னார்
களம்படக் கடந்த கழறொடித் தடக்கை
ஆர்கலி முழவி னதிகர் கோமான்
போரடு திருவிற் பொலந்தா ரஞ்சி
பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
நீல மணிமிடற் றொருவன் போல
மன்னுக பெரும நீயே தொன்னிலைப்
பெருமலை விடரகத் தருமிசைக் கொண்
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா
தாத னின்னகத் தடக்கிச்
சாத னீங்க வெமக்கீந் தோயே.

அப்போது பாடிய

பூங்கமல வாவிசூழ் புல்வேளூர்ப் பூதனையும்
ஆங்குவரு பாற்பெண்ணை யாற்றினையும் — ஈங்கு
மறப்பித்தாய் வாளதிகா வன்கூற்றி னைவை
அறுப்பித்தா யாமலகந் தந்து. (௨௧)

புல்வேளூர்ப் பூதன் வரகுசோறிட்டபோது பாடிய

வெண்பா

வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்
முரமுரவென் றேபுளித்த மோரும் — பரிவுடனே
புல்வேளூர்ப் பூதன் புகழ்புரிந் திட்டசோ
றெல்லா வுலகும் பெறும். (௨௨)

அவன் வயலுக்குக் கிணற்று நீரேறிப்பாயக் கட்டளையிட்டாள்.

கு-பு. புல்வேளூர் திருவண்ணாமலைத் தாலுகாவில் பெண்ணையாற்றங்கரையி லுள்ளது. அவ்வை 'அழியா வாழையும் ஒழியாக் கிணறு மாகுக' என்று சொன்னளென்பர்.

பழையனூர்க் காரிக்கு ஆடுவாங்கிக் கொடுக்க வாதவன், வத்தவன், யாதவன் மூவரிடத்தும் போய் அவர்கள் கொடாதபடியினலே சேரமானிடத்துப் போய்ச் சொல்லிய

[யென்றான்
வாதவர்கோன் பின்னையென்றான் வத்தவர்கோ னாளை
யாதவர்கோன் யாதொன்று மில்லையென்றான் - ஆதலால்
வாதவர்கோன் பின்னையினும் வத்தவர்கோ னாளையினும்
யாதவர்கோ னில்லை யினிது. (௨௩)

அப்பொழுது சேரன் பொன்னாடு கொடுக்கப் பாடிய

வெண்பா

சிறப்பார் மணிமுடிச் சேரமான் றன்னைச்
சுரப்பாடு கேட்கவே பொன்னாடொன் றீந்தான்
இரப்பவ ரென்பெறினுங் கொள்வர் கொடுப்பவர்
தாமறிவர் தங்கொடையின் சீர். (௨௪)

கு-பு. 'சேரா உன்னாடு பொன்னாடு' என்று அவ்வை சொன்னளென்பது பழைய வழக்கு.

பொய்யாமொழியார் பாதிபாட அவ்வையார் பாதி பாடியவை:—

வெண்பா

தண்ணீருங் காவேரி தார்வேந்த னுஞ்சோழன்
மண்ணாவ துஞ்சோழ மண்டலமே—பெண்ணாவாள்
அம்பர்ச் சிலம்பி யரவிந்தத் தாளணியும்
செம்பொற் சிலம்பே சிலம்பு. (உரு)

பத்தம்பிற் பாதி யுடையா னிரண்டம்பிற்
கொத்தம்பி யென்பார் கொளப்புக்குச் — சுத்தப்
பசும்பொ னரவல்குற் பாவையர்க்குத் தோற்று
விசும்பிடைவைத் தேகினான் வில். (உசா)

ஒருநாட் பசியினாலே ஒருவன் மனைக்குப் போக அவன் 'சோறில்லை போ' என்று சொன்ன பின்பு, அவன் மனைவி உபசாரஞ் சொல்லி அன்னமிட்டாள்; அப்போது சொல்லிய

வெண்பா

அற்ற தலையி லருகிற் றலையதனைப்
பற்றித் திருகிப் பறியேனோ — வற்றன்
மரமனையா னுக்கிம் மனையாளை யீந்த
பிரமனையான் காணப் பெறின். (உஎ)

ஒரு குறவன் பலாவைப் பகைவர் வெட்டிப் போட, அப்பலா வளரப் பாடிய

வெண்பா

கூரிய வாளாற் குறைபட்ட கூன்பலா
ஓரிலையாய்க் கொம்பா யுயர்மரமாய்ச் — சீரிய
வண்டுபோற் கொட்டையாய் வன்காயாய்ப் பின்
பண்டுபோ னிற்கப் பணி. [பழமாய்ப் (உஅ)

அப்போது குறப்பிள்ளைகள் நாழித்தினை கொடுக்க வாங்கிக் கொண்டு சோழனிடத்தில் வந்து பாடிய

வெண்பா

கூழைப் பலாத்தழையப் பாடக் குறச்சிறார்
மூழக் குழக்குத் தினைதந்தார் — சோழாகேள்
உப்புக்குப் பாடிப் புளிக்கு மொருகவிதை
ஒப்பிக்கு மென்ற னுளம். (௨௯)

கு-பு. மூழக்கு - மூவுழக்கு என்பதன் மரூஉ; தொல். எழுத்து. நச்சினார்க்கினியம், [illegible] சூத்திரம் பார்க்க. இராசராசச் சோழன் காலத்துச் சிலாலேகைகளிலும் 'மூழக்கு' என்னும் பதம் வருகின்றது. மூவுழக்கும் உழக்கும் நாலுழக்கு; ஒருநாழி.

அறம் பொருள் இன்பம் வீடு நான்கும் பாடிய

வெண்பா

ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றுங்
காத லிருவர் கருத்தொத்து — ஆதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு. (௩௰)

அரிசி கேட்க யானை கொடுத்த நாஞ்சில் வள்ளுவனைப் பாடிய

அகவல்

தடவு சினைப்பலவி னாஞ்சிற் பொருநன்
மடவன் மன்ற செந்நாப் புலவீர்
வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த
அடகின் கண்ணுறை யாக யாஞ்சில
அரிசி வேண்டினே மாகத் தான்பிற
வரிசை யறிதலிற் றன்னுந் தூக்கி
இருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்

பெருங்களிறு நல்கி யோனே யின்ன
தேற்றா வீகையு முண்டுகொல்
போற்றா ரம்ம பெரியோர் தங் கடனே. (௩௧)

(புறம் - ௧௪௦)

எழிற் கோவைப் பாடிய அங்கதம் ;

வெண்பா

இருடீர் மணிவிளக்கத் தேழிலார் கோவே
குருடேயு மன்றுநின் குற்றம் — மருடீர்ந்த
பாட்டு முரையும் பயிலா தனவிரண்
டோட்டைச் செவியு முள. (௩௨)

கு-பு. உலா என்னும் பாடல். இப்பாட்டுத் தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியற் சூத்திரவுரையில் செம்பொருளங்கதத் திற்கு உதாரணமாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இங்கே எழிற் கோவென்று குறிக்கப்பட்டவன் எழிமலைத் தலைவனாகிய நன்னன் என்பர். எழிமலை மேலைக்கடலருகிலுள்ள கண்ணனூரிலிருந்து வடக்கே பதினெட்டு மைல் தூரத்திலுள்ளது ; இஃது ஒரு ரெயில்வே ஸ்டேஷன்.

மூனறு கிழிக்குச் சங்கிலிபிறப்பாட, ஒரு கிழிக்கு நிறை நில்லாத கவிபாட, ஒரு கிழிக்கு நாலுகோடி கவி பாட என்று ஆக அஞ்சு கிழியும் பாண்டியன் வாசலிற் கட்டி வைத்தபோது கிழியறப் பாடிய

வெண்பா

தண்டாம லீவது தாளாண்மை தண்டி
அடுத்தக்கா லீவது வண்மை — அடுத்தடுத்துப்
பின்சென்று லீவது காற்கூலி பின்சென்றும்
பொய்த்தா னிவனென்று போமே லவன்குடி
எச்ச மிறுமே லிறு. (௩௩)

சென்றுழு துண்பதற்குச் செய்வ தரிதென்று
மன்றுழு துண்பான் மனைவாழ்க்கை — முன்றிலில்
தச்சி லிருந்து தடைத்தழுகண் ணீராலேழ்
எச்ச மிறுமே லிறு. (௩௪)

வழக்குடையார் நிற்ப வரும்பொருள் கைவாங்கி
வழக்கை வழக்கழிவு சொல்லின் — வழக்குடையார்
சுற்றமுந்தாமுந் தடைத்தழுகண் ணீராலேழ்
சுற்ற மிறுமே லிறு. (௩௫)

கு-பு. எழுகண்ணீரால் என்றும் பாடம்.

நிறைநில்லாதவகவல்

வையக மெல்லாம் வளவயலா வானோர்
தெய்வ மாமுகடு சேரிய தாகக்
காணமு முத்து மணியுங் கலந்தொரு
கோடானு கோடி கொடுப்பினு மொருநாள்
ஒருபொழு தொருவனா னொழிதல் பார்க்கும்
நேர்நிறை நில்லா தென்னுமென் மனனே
நேர்நிறை நில்லா தென்னுமென் மனனே.

கு-பு. வையகமெல்லா மனைவளாய் என்றும் பாடம்.

நாலுகோடிகவி

மதியாதார் முற்ற மதித்தொருகாற் சென்று
மிதியாமை கோடி யுறும். (௩௭)

உண்ணீருண் ணீரென்றே யூட்டாதார் தம்மனையில்
உண்ணாமை கோடி யுறும். (௩௮)

கோடி கொடுத்துங் குடிப்பிறந்தார் தம்மோடு
கூடுவதே கோடி யுறும். (௩௯)

கோடானு கோடி கொடுப்பினுந் தன்னுடைநாக்
கோடாமை கோடி யுறும். (௪0)

ஒருவனைப்பாடி அவன் 'ஒன்றுமில்லை' என்றபோது பாடிய

விருத்தம்

கல்லாத வொருவனைநான் கற்றாயென்றேன்
காடேறித் திரிவானை நாடாவென்றேன்
பொல்லாத வொருவனைநா னல்லாயென்றேன்
போர்முகத்துக் கோழையைநான் புலியேயென் [றேன்
மல்லாரும் புயமென்றேன் றேம்பற்றோளை
வழங்காத கையனைநான் வள்ளலென்றேன்
இல்லாது சொன்னேனுக் கில்லையென்றான்
யானுமென்றன் குற்றத்தா லேகின்றேனே. (சுக)

கு-பு. சூம்பற்றோள் என்றும் பாடம்.

ஒருவனைப்பாடி அவன் இகழ்ச்சிசொல்ல அப்போது பாடிய

அங்கதவகவல்

எம்மிக ழாதவர் தம்மிக ழாரே
எம்மிகழ் வோரே தம்மிகழ் வோரே
எம்புக ழிகழ்வோர் தம்புக ழிகழ்வோர்
பாரி யோரி நள்ளி யெழினி
ஆஅய் பேகன் பெருந்தோண் மலையனென்
றெழுவரு ளொருவனு மல்லை யதனால்
நின்னை நோவ தெவனோ யுறுவட்
டாற்றுக் குறைக் கட்டி போல
நீயு முளையே நின்னன் னோர்க்கே
யானு முளனே யெம்பா லோர்க்கே
குருகினும் வெளியோய் தேத்துப்
பருகுபா லன்னவென் சொல்லுகுத் தேனே. (சஉ)

கு-பு. இது தொல். பொருளதிகாரம் சஙஎ-ம் சூத்திரவுரையில் செம்பொருளங்கதத்துக் குதாரணமாகக் காட்டப்பட்டுளது. அங்கே அவ்வையார் பாட்டாகக் கூறப்படாமை நோக்கததக்கது. 'உறுவட் டாற்ருக் குறைக் கட்டிபோல' என்பதன் சுத்தபாடம் விளங்கவில்லை. பிரதிகளிலெல்லாம் இவ்வாறேயுளது.

சில புல்லறிவோர் தங்களைப் பாடச்சொன்னபோது பாடிய

அகவல்

மூவர் கோவையு மூவிளங் கோவையும்
பாடிய வென்றன் பனுவல் வாயால்
எம்மையும் பாடுக வென்றனிர் நும்மையிங்
கெங்ஙனம் பாடுகென் யானே வெங்கட்
களிறுபடு செங்களங் கண்ணிற் காணீர்
வெளிறுபடு நல்யாழ் விரும்பிக் கேளீர்
புலவர் வாய்ச்சொற் புலம்பலுக் கிரங்கீர்
இலவு வாய்ச்சிய ரிளமுலை புல்லீர்
அவிச்சுவை யல்லது தமிழ்ச்சுவை தேரீர்
உடீஇ ருண்ணீர் கொடீஇர் கொள்ளீர்
ஒவ்வாக் கானத் துயர்மரம் பழுத்த
துவ்வாக் கனியெனத் தோன்றிய நீரே. (சங)

திருக்கோவலூரில் அங்கவை சங்கவை என்கிற பெண்கள் வீட்டில் அவ்வைக்கு இலைக்கறி யிட்டபோது பாடிய

வெண்பா

வெய்தாய் நறுவிதாய் வேண்டளவுந் தின்பதாய்
நெய்தா னளாவி நிறையிட்டுப் — பொய்யே
அடகென்று சொல்லி யமுதத்தை யிட்டாள்
கடகஞ் செறியாதோ கைக்கு. (சச)

## சிற்றாடைகொடுக்க அப்போது பாடிய

வெண்பா

பாரி பறித்த கலனும் பழையனூர்க்
காரியன் றீந்த கழைக்கோலுஞ் — சேரமான்
வாராயோ வென்றழைத்த வார்த்தையு மிம்மூன்றும்
நீலச்சிற் றாடைக்கு நேர். (சரு)

கு-பு. இதனைப்பற்றிய கதையைச் செந்தமிழ் இரண்டாந் தொகுதி, 194, 195-ம் பக்கங்களிற் காண்க.

அங்கவை சங்கவையைத் தெய்வீகனுக்குக் கலியாணம் பண்ணுவிக்கிறபோது ஓலையெழுத விநாயகனை அழைத்த

வெண்பா

ஒருகை யிருமருப்பு மும்மதத்து நால்வாய்க்
கரியுரிவைக் கங்காளன் செம்மல் — கரிமுகவன்
கண்ணோல வோலை கடிதெழுத வாரானேல்
தன்னுண்மை தீர்ப்பேன் சபித்து. (சசு)

கு-பு. கல்யாணவோலை என்றும் பாடம்.

சேர சோழ பாண்டியர்க்கு விநாயகன் எழுதப் பாடிய

வெண்பா

சேரலர்கோன் சேரன் செழும்பூந் திருக்கோவல்
ஊரளவுந் தான்வருக வுட்காதே — பாரிமகள்
அங்கவையைக் கொள்ள வரசன் மனமிசைந்தான்
சங்கியா தேவருக தான். (சஎ)

புகார்மன்னன் பொன்னித் திருநாடன் சோழன்
தகாதென்று தானிங் கிருந்து — நகாதே
கடுக வருக கடிக்கோவ லூர்க்கு
விடியப்பதி னெட்டா நாள். (சஅ)

வையைத் துறைவன் மதுராபுரித் தென்னன்
செய்யத் தகாதென்று தேம்பாதே — தையற்கு
வேண்டுவன கொண்டு விடியப்பதி னெட்டாநாள்
ஈண்டு வருக விசைந்து. (சுக)

கு-பு. விடியல் பதினெட்டாநாள் என்றும் பாடம்.

மூவரும் வந்தபோது பனந்துண்டத்தைப் பாடியது:-

திங்கட்குடையுடைச்சேரனுஞ் சோழனும்பாண்டியனும்
மங்கைக் கறுகிட வந்துநின் றார்மணப் பந்தரிலே
சங்கொக்க வெண்குருத் தீன்றுபச் சோலை சலசலத்துக்
கொங்கிற் குறத்தி குவிமுலை போலக் குரும்பைவிட்டு
நுங்குக்கண் முற்றி யடிக்கண் கறுத்து நுனிசிவந்து
பங்குக்கு மூன்று பழந்தர வேண்டும் பனந்துண்டமே.()

அந்தக் கலியாணத்திற் பெண்ணையாற்றைப் பாடிய

வெண்பா

முத்தெறியும் பெண்ணை முதுநீ ரதுதவிர்ந்து
தத்திவரு நெய்பா றலைப்பெய்து — குத்திச்
செருமலைத் தெய்வீகன் றிருக்கோவ லூர்க்கு
வருமளவிற் கொண்டோடி வா. (ருக)

கு-பு. இந்தக் கதையைத்தான் வரந்தருவார் பாரதத்துக்குத் தாம் பாடிய பாயிரத்தில் "அவ்வைபாடலுக்கு நறுநெய்பால் பெருகி யருந்தமிழறிவினுற் சிறந்து — தெய்வமாநதி நீர் பரக்கு நாடந்தத் திருமுனைப்பாடி நன்னாடு" என்று குறித்தது.

அப்போது வருணனைப் பாடிய

வெண்பா

கருணையா லிந்தக் கடலுலகங் காக்கும்
வருணனே மாமலையன் கோவற் — பெருமணத்து
நன்மாரி தாழ்க்கொண்ட நன்னீர தவிர்ந்து
பொன்மாரி யாகப் பொழி. (ருஉ)

சோழன் ஒரு துகிலைப் பார்த்துப் பராக்காக இருப்ப அப்போது பாடிய

வெண்பா

நாற்றுப்பத் தாயிரம் பொன்பெறினு நூற்சீலை
நாற்றிங்க டன்னிற் கிழிந்துபோம்—மாற்றலரைப்
பொன்றப் புறங்கண்ட போர்வே லகளங்கா
என்றுங் கிழியாதென் பாட்டு. (ருரு)

திருக்குடந்தையில் இரண்டு வேளாளர் ஒருத்தன் லோபியும் ஒருத்தன் விதரணியுமாக இருந்தவர்களைப் பாடிய

வெண்பா

திருத்தங்கி தன்வாழை தேம்பழுத்து நிற்கும்
மருத்தன் திருக்குடந்தை வாழை — குருத்தும்
இலையுமிலைப் பூவுமிலைக் காயுமிலை யென்றும்
உலகில் வருவிருந்தோ டுண்டு. (ருச)

கு-பு. சோழமண்டல சதகம் 65-ம் கவி பார்க்க.

ஒருவன் ஆடம்பரவானாகவந்த கீழான புலவன் கவியைக் கேட்டு இவள் கவியைக் கேளாதிருந்தான்; அப்போது பாடிய

வெண்பா

விரக ரிருவர் புகழ்வாரும் வேண்டும் [ரு
விரனிறைய மோதிரமும் வேண்டும்— அரையிலொ
பஞ்சேனும் பட்டேனு மில்லையோ பாணிகவி
நஞ்சேனும் வேம்பேனு நன்று. (ருரு)

சேரன் கைலைக்குப் போகிறபோது அவ்வையாரை அழைக்க, அவள் விநாயகபூசை பண்ணித் தாமதமா

யிருக்க, விநாயகன் தன் துதிக்கையாலெடுத்துக் கைலை யில் விடச், சேரனைக்கண்டு பாடிய

கலித்துறை

மதுர மொழியி னுமையாள் சிறுவன் மலரடியை
முதிர நினையவல்லார்க் கரிதோ முகில்போன் முழங்கி
அதிர வருகின்ற யானையுந் தேரு மதன்பின்வருங்
குதிரையுங் காதங் கிழவியுங் காதங் குலமன்னனே.(௫௪)

சேரன் கைலையிலிருக்கத், திரும்பவந்து பாடிய

வெண்பா

சிறுக்கீரை வெவ்வடகுஞ் சேதாவி னெய்யும்
மறுப்படாத் தண்டயிரு மாந்தி — வெறுத்தேனை
வஞ்சிக்குங் கொற்கைக்கு மன்னவனேற் பித்தானே
கஞ்சிக்கும் புற்கைக்குங் கை. (௫௭)

முருகவேள் கேட்கப், பாடிய

அகவல்

அரியது கேட்குந் தனிநெடு வேலோய்
மக்கள் யாக்கையிற் பிறத்தலு மரிதே
மக்கள் யாக்கையிற் பிறந்த காலையும்
மூகையுஞ் செவிடுங் கூனுங் குருடும்
பேடு நீக்கிப் பிறத்தலு மரிதே
பேடு நீக்கிப் பிறந்த காலை
ஞானமுங் கல்வியு நற்குற லரிதே
ஞானமுங் கல்வியு நற்குறு மாயினுந்
தானமுந் தவமுந் தரித்தலு மரிதே
தானமுந் தவமுந் தரித்தோற் கல்லது
வானவ னுடு வழிதிற வாதே. (௫அ)

தத்துவங் கூறியது: — வெண்பா

ஒன்றாகக் காண்பதே காட்சி புலனைந்தும்
வென்றான்றன் வீரமே வீரம் — ஒன்றானுஞ்
சாகாமற் கற்பதே வித்தை தனைப்பிறர்
ஏவாம லுண்பதே யூண். (ருகூ)

உழவு நன்றோ என்று கேட்டபோது பாடிய

வெண்பா

ஏரு மிரண்டுளதா யில்லத்தே வித்துளதாய்
நீராருகே சேர்ந்த நிலமுமாய் — ஊருக்குச்[ட்டால்
சென்றுவர வண்ணிதாய்ச் செய்வாருஞ் சொற்கே
என்று முழவே யினிது. (கூ0)

கு-பு. அவ்வை சரிதத்தில் விளங்காதவற்றைச் செந்தமிழ் இரண்டாந் தொகுதியிற் கண்டுகொள்க.

## பொய்யாமொழியார்

வாய்த்த வயிரபுர மாகாளி யம்மையே
ஆய்த்த வருகா ரணிவயலிற் — காய்த்த
கதிரைமா ளத்தின்ற காளிங்க னேறுங்
குதிரைமா ளக்கொண்டு போ. (கூக)

கு-பு. வயிரபுரம் என்பது க்ஷேத்திரபாலபுரம் என்றும் மாயூரந்தாலுகாவி லுள்ள தென்றும் இப்பாட்டுக் கம்பர் பாடிய தென்றும் கூறுவர்.

இவராசிரியர் பாடிய வெண்பா

பொதியி லகத்தியனைப் பொய்யா மொழியாய்
அதிக வமணப்பர்க் கீழாய்த் — துதிபெருகு
செங்காட்டுக் கோட்டந் துறையூ ரனுந்தலத்துச்
சங்காத்தங் கொண்டிருப்பாய் தான். (கூஉ)

கு-பு. இப்பாட்டில் இரண்டாமடியின் சுத்தபாடந் தெரியவில்லை.

பாண்டியன் வாசலிற்போய்ப் பாதி வசையும் பாதி நசையும் பாடிய

கலித்துறை

குழற்கா லரவிந்தங் கூம்பக் குமுதம் பொதியவிழ்ப்ப
நிழற்கான் மதியமன் றேநின் றிருக்குல நீயவன்றன்
அழற்கா லொளிர்சடை மீதே யிருந்துமவ் வந்திவண்ணன்
கழற்கால் வணங்குதி யோவணங் காமுடிக் கைதவனே.

கு-பு. புழைக்கா லரவிந்தம் என்றும் பாடம்.

சங்கப் பலகையிற் சிலா ரூபமான சங்கத்தாரைப் பாடிய

வெண்பா

உங்களிலே யாரொருவ னொப்பேனோ வொவ்வேனோ
திங்கட் குலனறியச் செப்புங்கோள் — சங்கத்துப்
பாடுகின்ற முத்தமிழென் பன்னூலு மேற்குமோ
ஏடவிழ்தா ரேழெழுவீ ரின்று. (௫௪)

சங்கப்பலகை மிதப்பப் பாடிய

வெண்பா

பூவேந்தர் முன்போற் புரப்பா ரிலையுன்றிப்
பாவேந்த ருண்டென்னும் பான்மைதான்—மாவேந்தன்
மாற னறிய மதுரா புரித்தமிழோர்
வீறணையே சற்றே மித. (௫௫)

காளையார் கோயில் தேவடியார் எழுபதுபேரும் எழுபதினாயிரம் பொன் கொடுக்கப் பாடிய

வெண்பா

வாச மலர்மடந்தை போல்வார்வண் கானப்பேர்
ஈசன் றமர்க ளெழுபதின்மர் — தேசத்
திரவலர்மே னீட்டுவர்கை யீண்டுலகங் காக்கும்
புரவலர்மே னீட்டுவர்பொற் கால். (௫௬)

### சீநக்கன் கட்டுச்சோறு கொடுக்கப் பாடிய

கலி விருத்தம்

அளிகொ ளுந்தொடை யானர சைக்குமன்
ஒளிகொள் சீநக்க னின்றுவந் திட்டசீர்ப்
புளியஞ் சோறுமென் புந்தியிற் செந்தமிழ்
தெளியும் போதெலாந் தித்தியா நிற்குமே. (சுஎ)

கு-பு. சோழமண்டல சதகம் 54-ம் செய்யுள் பார்க்க. சிறீநக்கன் என்பது சீநக்கன் என்றாயது போலும்; சீமான் என்பது போல.

### சீநக்கனுக்குப் பாடிக் கொடுத்த

வெண்பா

திறையின் முறைகொணர்ந்து தெவ்வரெல்லா மீண்ட
இறையு மிறைகடக்க லாகா — அறைகழற்காற்
போர்வேந்தர் போர்மாளப் போர்வா ளுறைகழித்த
தேர்வேந்தன் றஞ்சைத் தெரு. (சுஅ)

கு-பு. சோழமண்டல சதகம் 53-ம் செய்யுள் பார்க்க.

### கண்டியூர் வண்ணாத்தியைப் பாடிய

வெண்பா

தூசுதூ சாக்குவார் பாவை சுடர்த்தொடிக்கை
ஆசிலாக் கண்டியூ ராரணங்கு — வாசமலர்க்
கண்ணங்கை கொங்கைமுகங் காலுங் கடிக்கமலம்
கண்ணங்கை கொங்கைமுகங் கால். (சுகூ)

கு-பு. தூசு தூய்தாக்குவார் பாவை என்றும் பாடம். தூசு தூசாக்குவார் என்ற பாடத்தில் இரண்டாவது தூசைத் தூய்தென்பதன் மரூஉ என்று கொள்க.

முருகவேளைப் பாடிய

வெண்பா

பொன்பாவுங் கன்னிப் பொறிப்புறவே யேதிலன்பின்
என்பாவை போக விசைந்தனளே — மின்பாயும்
மானவேன் முட்டைக்கு மாறாய தெவ்வர்போம்
கானவேன் முட்டைக்குங் காடு. (௭0)

கு-பு. இப்பாட்டின் முதலடி யிரண்டும் "பொன்போலுங் கள்ளிப் பொறிபறக்குங் கானலிலே, என்பேதை செல்லற் கியைந் தனளே" என்று இப்போது வழங்குகின்றது.

சிராமலையைப் பாடிய

கலித்துறை

அங்கம் புலியத ளாடையைச் சாத்தி யரவமுடன்
பங்கம் புலிவைத்த பண்பர்க் கிடம்பணை வாளெயிற்று
வெங்கட் புலியைவிட் டியானையைத் தேடி விதம்விதமாச்
சிங்க மிருந்து தனித்தனி நோக்குஞ் சிராமலையே. (௭௧)

நாலுபேருக்குக் கண் தெரியப் பாடிய

வெண்பா

கூத்தாண் முகத்திரண்டு கூர்வேல்கள் கூத்தாடன்
மூத்தாண் முகத்தின் முழுநீலம் — மூத்தாடன்
அன்னை முகத்தி லரவிந்த மன்னைதன்
அன்னை முகத்திரண் டம்பு. (௭௨)

கு-பு. காளையார் கோயிலிலே ஒருநாளிரவிலே பொய்யா-மொழிப்புலவர் பசியால் வருந்திக் கூத்தாள் என்னுந் தாசியின் வீட்டை யடைந்து அவளை உசாவ, அவளும், அவள் தமக்கை-யும், தாயும், பாட்டியும், கண்தெரியாது வருந்துவதா கண்டு மன-மிரங்கி இப்பாடலைப்பாட அவர்கள் கண்தெரியப் பெற்றனர் என்ப. செந்தமிழ் தொகுதி V, பக்கம் 509.

பாண்டியன் 'நீர் நல்ல புலவன்' என்றபோது பாடிய

வெண்பா

அறமுரைத் தானும் புலவன் முப்பாலின்
திறமுரைத் தானும் புலவன் — குறுமுனி
தானும் புலவன் றரணி பொறுக்குமோ
யானும் புலவ னெனில். (எஙூ)

பொய்யாமொழியார்க்கு அபவாதம் வந்தபோது பாடிய

தரவு கொச்சகக் கலிப்பா.

தேரையார் தெங்கிளநீ ருண்ணார் பழிசுமப்பர்
நாரியார் தாமறிவர் நாமவரை நத்தாமை
கோரைவாய் பொன்சொரியுங் கொற்றவன்றன் கண்டி
யூரைவாய் மூட வுரையறிந்தோ ரில்லையே. (எச)

கு-பு. சீநக்கன் கட்டிலிற் புலவர் ஒருநாள் படுத்து நித்திரை கொள்ள, அவரைச் சீநக்கன் மனைவி தன் கணவனென் றெண்ணி அருகிற்படுத்து நித்திரை போயினள். அதனைச் சீநக்கன் கண்டு, இஃது அறியாமையால் நிகழ்ந்தது என்று எண்ணிக்கொண்டு, புலவரைத் தட்டித் தனக்கு இடம் விட்டுச் சற்று விலகிப்படுக்கும்படி கேட்டான் என்றும் இந்நிகழ்ச்சியால் புலவருக்கபவாதம் உண்டாயிற்றென்றுஞ் சொல்லுப. செந்தமிழ் தொகுதி V, பக்கம் 540.

புலையன்றன் உடல் வெடிக்கப் பாடியது :—

வெண்பா

கோதில்குல மங்கைக் குலோத்துங்கச் சாவகனென்
றோதினேன் றன்னை யொறுப்பதனால் — மாது
துளையாது முத்துவடந் தூக்கினா ளாரம்
விளையாடு செப்பிரண்டின் மேல். (எரு)

சீநக்கருடன் தீப்புகுந்த பாட்டு:—

வெண்பா

அன்றுநீ செல்லக் கிடவென்று யாருயிர்விட்
டின்றுநீ வானுலக மெய்தினுய் — வென்றிதிகழ்
வானக்க பூண்மடவார் மார்பனே கண்டியூர்ச்
சீநக்கா செல்லக் கிட. (௭௬)

கு-பு. அன்று - நான் ஏனது சட்டியில் உன் மனைவியுடன் தூங்கிய அன்று. செல்லக்கிட என்ற தொடருக்கு இப்போது கொள்ளு மர்த்தம் பொருந்துவதாகக் காணவில்லை.

கம்பர்

கம்பர் தெய்வவரத்தினுற் கவிசொல்லிய நாளிற் பாடிய

வெண்பா

மோட்டெருமை வாளிபுக முட்டுவரால் கன்றென்று
வீட்டளவும் பால்சொரியும் வெண்ணெயே—நாட்டில்
அடையா நெடுங்கதவு மஞ்சலென்ற சொல்லும்
உடையான் சடராம னூர். (௭௭)

கு-பு. சடராமனென்பது வெண்ணெய் நல்லூர்ச் சடையப்பனுக்கொருபெயர்.

ஏரெழுபது பாடி அரங்கேற்றும்போது புதுவைச் சேதிராயனை விடந்தீண்டத் தீர்த்த

வெண்பா

ஆழியான் பள்ளி யணையே யவன்கடைந்த
வாழி வரையின் மணித்தாம்பே — பூழியான்
பூணே புரமெரித்த பொற்சிலையிற் பூட்டுகின்ற
நாணே யகல நட. (௭௮)

மங்கை யொருபாகன் மார்பிலணி யாரமே
பொங்கு கடல்கடைந்த பொற்கயிறே — திங்களையுஞ்
சீறியதன் மேலூருந் தெய்வத் திருநாணே
ஏறிய பண்பே யிறங்கு. (எஅ)

கு-பு. இச் சேதிராயனைப் புதுவைச் சடையன் மகனென்று கருதுகின்றனர் — செந்தமிழ்த் தொகுதி V, பக்கம் 59. இக்கதை தொண்டை மண்டல சதகத்திலும் (57) திருக்கை வழக்கத்திலும் (69, 76) கூறப்பட்டுளது.

காவிரி எச்சில்படப் பாடிய

வெண்பா

மெய்கழுவி வந்து விருந்துண்டு மீளுமவர்
கைகழுவ நீர்போதுங் காவிரியே — பொய்கழுவும்
போர்வேல் சடையன் புதுவையான் றன்புகழை
யார்போற்ற வல்லா ரறிந்து. (அ0)

கு-பு. போர்வேல் என்பதும் புதுவையான் இல்லறத்தை என்பதும் மூவலூர்க் கல்வெட்டின் பாடம் - செந்தமிழ் IV, பக்கம் 252.

காவிரி பெருக்கடங்கப் பாடிய

வெண்பா

கன்னி யழிந்தனள் கங்கை திறம்பினள்
பொன்னி கரையழிந்து போனாளென் — றிந்நீர்
உரைகிடக்க லாமோ வுலகுடைய தாயே
கரைகடக்க லாகாது காண். (அக)

ஒரு வேளாளன் களத்தில் குறுணிநெல் வாங்கி வேலிக்காலில் இறைத்துப் பாடிய

வெண்பா

செட்டிமக்கள் வாசல்வழிச் செல்லோமே செக்காரப்
பொட்டிமக்கள் வாசல்வழிப் போகோமே — இட்டமிலாப்
பார்ப்பா ரகத்தையெட்டிப் பாரோம் பரிசறிந்து
காப்பா ருழவாளர் காண்.

வாணியன் தாதன் விருதுகாளம் பிடிக்கப் பாடிய

கலித்துறை

கூளம் பிடித்தெள்ளின் கோதுவைப்
பானங் குலக்கவிக்குக்
காளம் பிடித்திடிற் சின்னம்
படுமன்னர் காதலிமார்
வேளம் பிடித்தகண் வெள்ளம்
பிடிக்கவெம் பேய்க்கிளம்பேய்
தாளம் பிடிக்கத் தனிவேல்
பிடித்த சயதுங்கனே. (அ௩)

தாதனைப் பாடிய கொச்சகக் கலிப்பா

தாதாவென் றுலுந் தருவென்று சொன்னாலுந்
தாதாவென் றுலுந் தருவனே தாராதான்
தாதாவென் றுலுந் தருவென்று சொன்னாலுந்
தாதாவென் றுலுந் தருவனந் தாதனே. (அ௪)

சோழனுடன் கோபித்துக்கொண்டு மதுரைக்குப் போம்போது பாடிய வெண்பா

காத மிருபத்து நான்கொழியக் காசினியை
ஓதக் கடல்கொண் டொளித்ததோ — மாதவா
கொல்லி மலையுடைய கொற்றவா நீமுனிந்தால்
இல்லையோ வெங்கட் கிடம். (அ௫)

கூட்டிக்கொண்டுவரச் சோழன் அனுப்பிய இணையாரமார்பனைப் பாண்டியன் 'இவனார்' எனப் பாடிய

வெண்பா

என்னுடைய தம்பி சரராம னுக்கிளையான்
கன்னன் மதயானைக் கம்பன்மகன் — தென்னு
பனையார்நீர் வேலிப் பழனஞ்சூழ் சோணாட்
டிணையார மார்ப னிவன்.

கு-பு. பிரதிகளிலெல்லாம் 'வெட்டிக்கொண்டுவர' என்பது பாடம். இக்கதை சோழமண்டலசதகம் 70-ம் செய்யுளில் குறிக்கப்பட்டுளது.

பாண்டியனுந் தேவியும் பல்லக்குச் சுமக்க அப்போது பாடிய

வெண்பா

உமையவளு நீயு மொருங்கொப்பை யொப்பை
உமையவளுக் குண்டங்கோ ருனம் — உமையவடன்
பாகந்தோய்ந் தாண்டான் பலிக்குழன்றான் பாண்டியனின்
பாகந்தோய்ந் தாண்டான் பதி. (அஎ)

பின்னொருகாற் சோழனுடனே கோபித்துக் கொண்டு சொன்ன

வெண்பா

மன்னவனு நீயேயோ மண்ணுலகு மிவ்வளவோ
உன்னையோ நான்புகழ்ந்திங் கோதுவதும் — என்னை
விருந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ சோழா
குரங்கேற்றுக் கொள்ளாதோ கொம்பு. (அஅ)

பிரதாபருத்திரனிடத்திற்போய் அவன் அடைப்பை கட்டிவரப் பாடிய

வெண்பா

அவனி முழுதாண்டு மயிராவ தத்துள்
பவனி தொழுவார் படுத்தும் — புவனி
உருத்திரா வுன்னுடைய வோரங்க ளூட்டிற்
குருத்திரா வாழைக் குழாம். (அகூ)

கு-பு. பிரதாபருத்திரன் ஓரங்கல் நாட்டை அரசாண்ட கணபதியரசர்களில் ஒருவன். இவன் முதலாம் பிரதாபருத்திரன்போலும். இவன் பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்தவன்.

## திருவொற்றியூர் வல்லியைக் கண்டு சொல்லிய

கலிப்பா

இல்லென்பார் தாமவரையாமவர்தம் பேரறியோம்
பல்லென்று செவ்வாம்பன் முல்லையையும் பாரித்துக்
கொல்லென்று காமனையுங் கண்காட்டிக் கோபுரக்கீழ்
நில்லென்று போனாரென் னெஞ்சைவிட்டுப் போகாரே.

பின்பு சொன்ன

விருத்தம்

நடக்கி லன்னமா நிற்கினல் வஞ்சியாம்
கிடக்கி லோவியப் பாவை கிடந்ததாம்
தடக்கை யான்சது ரானன பண்டிதன்
மடத்து ளாளென் மனத்துறை வல்லியே. (௩௧)

கு-பு. திருவொற்றியூரில் சதுரானனபண்டிதன் என்றொரு மடாதிபதி பதின்மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியிலிருந்ததாகக் கல்வெட்டுக்களால் தெரிகின்றது.

அப்போது வல்லி வீட்டுக்கு எருமை வாங்கிவரப் போய், காளிம்பன் நிரைகள் மேய்ப்பானைக் கண்டு அவன்பேரிற் பாடிப் பாட்டுச் சொல்ல, அவன் ஈன்ற எருமை ஆயிரங்கொடுத்த

வெண்பா

புக்கு விடைதழுவிக் கொண்டுழுத புண்ணெல்லாந்
திக்கிலுறை காளிம்பன் றென்புழன்மான்—அக்கணமே
தோள்வேது கொண்டிலளேற் சுந்தரப்பொற் றோ
வாழ்வேதுங் கண்டிலமே மற்று. [ன்றனுக்கு

கு-பு. புழல் என்பது ஒரு கிராமம்; திருவொற்றியூருக்கு மேற்கில் ஐந்துமைல் தூரத்திலுள்ளது.

மயிலாப்பூரிற் போய்த் தட்டான் திருவாலிமேற் பாடிய

வெண்பா

அண்ணா றிருவாலி யணிமயிலை யத்தனையும்
வெண்ணிலவின் சோதி விரித்ததே — நண்ணுந்
தடந்துப்பு விற்பாணந் தன்முகத்தே கொண்டு
நடந்துப்பு விற்பா ணகை. (௬௩)

பின்பொருகால் குரும்பை என்னுந் தாதியைத் தழுவிச் சொல்லிய

கலித்துறை

சொல்லியைச் சொல்லி னமுதான சொல்லியைச் சொற்கரும்பு, வில்லியை மோக விடாய்தவிர்ப் பாளை விழியம்பினாற், கொல்லியைக் கொல்லியம் பாவையொப் பாளைக் குளிரொற்றியூர், வல்லியைப் புல்லிய கைக்கோ விவர்வந்து வாய்த்ததுவே. (௬௪)

அதிகாரியை வெட்டுவிக்கப் பாடிய

வழுப்பாட்டு

சென்னி விளைகழனிச் செஞ்சிவாழ் சோழாண்டே
மன்னுபுக ழொற்றியூர் மட்பக்க நாச்சியார்
தம்மை வரவிட்ட பூழலோ பூழல். (௬௫)

கு-பு. மட்பக்க நாச்சியாரை இப்போது வட்டப்ப நாச்சியார் என்கின்றனர்.

பின்பு காளியைப் பந்தம்பிடி என்று பாடிய

வெண்பா

ஒற்றியூர் காக்க வுறைகின்ற காளியே
வெற்றியூர் காகுத்தன் மெய்ச்சரிதை — பற்றியே
நந்தா தெழுதுதற்கு நல்லிரவின் மாணுக்கர்
பிந்தாமற் பந்தம் பிடி.

வெண்பா

வில்லி களந்தைமின்னை விண்ணவர்தங் கோமானை
வல்லிநெடுஞ் சேடனையும் வாணனையும் — புல்லியுறப்
பார்க்கும் போதும்மதரம் பற்றும்போதுந் தனத்தைச்
சேர்க்கும்போதும் நினைப்பஞ் சென்று.

இதுவுமொரு பாட்டு. (௬௭)

கு-பு. பார்ப்பதற்கு ஆயிரங்கண் இல்லையே என்று இந்திரனை யும், அதரம் பற்றுவதற்கு ஆயிரம்வா. யில்லையே என்று ஆதி சேடனையும், தனத்தைச் சேர்ப்பதற்கு ஆயிரங்கை யில்லையே என்று வாணனையும் நினைப்பேம் என்க.

நெற்பயிர் விளைகழனி நென்மலிவாழ் தச்சன்
கற்படு திண்டோளன் கங்கண கணகணவன்
விற்புரை திருநுதலாள் மிம்மினு மினுமினுமி
சொற்படி வேலைசெய்வாள் துந்துரு துருதுருமி.

இதற்குத் தியாகம் ஆயிரக்கல நெல்லு. (௬௮)

கு-பு. ஏடுகளில் "இதற்குத்தியாகம் ஆயிரக்கல நெல்லு" என்னுங் குறிப்பு ௬௭-ம் பாட்டைச்சேர எழுதப்பட்டுளது. சோழமண்டல சதகம் 97-ம் பாட்டில் குறித்தபடி நென்மலித் தச்சன்தான் ஆயிரக்கல நெல்லுக் கொடுத்தவன்போலும். நென் மலி என்னுமூர் செங்கற்பட்டு ஜில்லாவில் ஸ்ரீபெரும்பூதூருக்குச் சமீபத்தில் (இரண்டு மைல் தூரத்தில்) உள்ளது.

சோழன் புலியைக் கொல்லவிட்டபோது பாடிய

கலித்துறை

வெங்கண்சிவந்து வெடிவான் முறுக்கி வெகுண்டெழுந்தென்
அங்கம்பிளக்க வரும்புலி யேயென் றிரணியனைப்
பங்கம் படப்பட வள்ளுகி ராலுரம் பற்றியுண்ட
சிங்க மிருப்பதுகாண்டுகெடுவா யென்றன் சிந்தையுள்ளே.

சோழன் எய்தபோது பாடியது:—

வெண்பா

வில்லம்புஞ் சொல்லம்பு மேதகவே யானாலும்
வில்லம்பிற் சொல்லம்பு வீறுடைத்து — வில்லம்பு
பட்டுருவிற் றென்னையென் பாட்டம்பு நின்குலத்தைச
சுட்டெரிக்கு மென்றே துணி. (௧00)

மரணகாலத்திற் பாடிய கவி :—

வெண்பா

ஆன்பாலுந் தேனு மரம்பைமுதன் முக்கனியுந்
தேம்பாய வுண்டு தெவிட்டுமனந் — தீம்பாய்
மறக்குமோ வெண்ணெய் வருசடையா கம்பன்
இறக்கும்போ தேனு மினி. (௧0௧)

கு-பு. இப்பாட்டுச் சோழமண்டல சதகத்தில் எடுத்தாளப் பட்டுளது. அச் சதகத்தில் 79-ம் பாட்டுப்பார்க்க.

தாதன் பாடிய வசை :—

கலித்துறை

கைம்மணிச் சீரன்றிச் சீரறியாக் கம்பநாடன் சொன்ன
மும்மணிக்கோவை முதற்சீர் பிழைமுனை வாளெயிற்றுப்
பைம்மணித் துத்திக்கணமணிப் பாந்தட் படம்பிதுங்கச்
செம்மணிக் கண்பதம்பொக்கக் கொல் யானைச செயதுங்கனே. ()

கு-பு. இந்தத் தாதன் மேலே 83-ம் செய்யுளிற் கூறிய வாணி யன் தாதன்: தொண்டை மண்டலசதகம் 45-ம் பாட்டும் அதன் மேற்கோளும் பார்க்க.

கம்பன் பேரில் பாடிய கையறம் :—

வெண்பா

இன்றோநங் கம்ப னிறந்தநா ளிப்புவியில்
இன்றோநம் புன்கவிகட் கேற்றநாள்-இன்றோதான்

பூமடந்தை வாழப் புவிமடந்தை வீற்றிருப்ப
நாமடந்தை நூல்வாங்கு நாள். (௧0௫)

கு-பு. கையறம் - கையறுநிலை.

வாளை தூக்கிய வலையனைப் பாடியது:—

பந்தரிலே வாளை தூக்கும் பனையன்மகன் சோரன்
தங்கள் வீட்டிலே யிருந்தாலு மிருந்தான்
தங்களாத்தாள் வீட்டிலே யிருந்தாலு மிருந்தான்.

கு-பு. வாளை-வாளைமீன். வலையன்-வலைஞன்,மீன் பிடிப்பவன்.

## தொல்காப்பியதேவர்

தொல்காப்பிய தேவர், சமணர் கோவிலுக்குச் செங்கலறுப்பிக்கச், சிவதலத்தார் தங்களெல்லையென்ற போது பாடியது:—

வெண்பா

வேத மொழிவிசும்பு மேனி சுடர்விழிமண்
பாதந் திருப்பா திரிப்புலியூர் — நாதர்
பரமாம் பரமாம் படிகடலெண் டிக்குங்
கரமா மவர்க்குயிர்ப்பாங் கால். (௧0௬)

கு-பு. இப்பாட்டுத் தொல்காப்பிய தேவர் பாடிய திருப்பா திரிப்புலியூர்க் கலம்பகத்தில் உள்ளது; இரண்டாம் பாட்டு.

இதுகேட்டுக் கலம்பகம் பாடச்சொல்லிப் பாடினார். அரங்கேற்றும்போது சிதம்பரத்திற் கயிறுபோட்டுப்பார்க்கக் கண்ட கவி :—

கொச்சகக் கலிப்பா

பாடுவார் பாடும் பரிசில் வரிசையெல்லாம்
ஆடுவா ரன்றி யயலா ரறிவாரோ
தோடுவார் காதன்றே தோன்றாத் துணையையர்
பாடுவா ரோரிருவர்க் கிட்ட படைவீடே. (௧0௭)

கு-பு. இப்பாட்டும் திருப்பாதிரிப் புலியூர்க் கலம்பகத்தில் உள்ளது; 16-ம் பாட்டு. "அரங்கேற்றும்போது சிதம்பரத்திற் கயிறுபோட்டுப் பார்க்கக்கண்ட கவி' என்னுங் குறிப்பினால் தொல்காப்பிய தேவர் கலம்பகம்பாடி அரங்கேற்றப் போனபோது ஏதோ தடை நிகழ்ந்ததென்றும் அப்போது ஈசன் திருவுள மறியக் கலம்பகத்தில் கயிறு சார்த்தப்பட்டதென்றும் அப்போது இப் பாட்டுவந்து தோன்றினதென்றும் கருதப்படுகின்றது. சிதம்பரத்தில் கலம்பகம் பாடுவதற்குமுன் இரட்டையர்கள் திருப்பாதிரிப் புலியூர்க் கலம்பகப் புத்தகத்தில் கயிறு சார்த்திப் பார்த்தார்கள் என்றும் அப்போது இந்தப்பாடல் அகப்பட்டதென்றும் மகாமகோபாத்தியாயர் சாமிநாத ஐயரவர்கள், தாம் அச்சிட்ட திருப்பாதிரிப் புலியூர்க் கலம்பகத்து முகவுரையில், கூறுங் கூற்றுப் பொருத்தமாகக் காணப்படவில்லை. அன்றியும் "தொல்காப்பிய தேவர் சொன்ன தமிழ்ப்பாடலன்றி''என்றதற்கேற்ப அக்கவி இரட்டையரைத் திருவாமாத்தூருக்குக் கலம்பகம் பாடச் சொன்னபோது சொன்னதன்றி, மகா மகோபாத்தியாயர் சொல்லுமாறு, சிதம்பரத்திற்குக் கலம்பகம் பாடச சொன்னபோது சொன்னதன்று. முன்னர் வரும் 112-ம் கவியையும் அதன் குறிப்பையும் பார்க்க.

**பின்னிரண்டடியிற் குறித்த கதை:**—அசுவதரர் கம்பளர் என்னும் நாகர் இருவர் நாமகளைக் குறித்துத் தவஞ்செய்து மிக்க இசை யுணர்ச்சி பெற்றுச் சிவபெருமானைக் கருதிப் பலநாள் பாடிக்கொண்டிருந்து வரம்பெற்றுப் பின்பு அவருடைய திருச் செவிகளிலே கோடுகளாக அமைந்திருந்தனர் என்ப.

## இரட்டையர்

**இரட்டையர் திருவக்கைக் கொங்கராயன் அசனமிடுவித்தபோது பாடிய கவி :-**

விருத்தம்

**சாணர்க்கு முன்னிற்கு மாட்கொண்ட நாயன் றமிழ்க் கொங்கர்கோன், பாணுற்ற வரிவண்டு சேர்வக் கை நகராதி பக்கத்திலே, ஊணுக்கு வாரா திருப்பாய்**

**விருப்பாகி யுயர்வானிலே, வீணுக்கு நின்ருக மெலி கின்ற திவ்வாறு வெண்டிங்களே. (௧0௭)**

கு-பு. திருவக்கைக் கொங்கராயனை ஆட்கொண்ட நாயன் என்பவனை வில்லிபுத்தூரரைக் கொண்டு பாரதம் பாடுவித்த வக்கபாகை என்னும் ஊரிலிருந்த கொங்கர்குலவரபதி யாகிய ஆட்கொண்டான் என்று கருதப்படுகின்றது. வக்கபாகை வக்கை என மரீஇயிற்று. வக்கபாகையைத் திருவக்கரை என்னும் சிவத் தல மென்பர் சிலர்; அது பொருந்தாது. திருவக்கரை தொண்டை நாட்டிலுள்ளது; மற்று வக்கபாகையோ கோவல்சூழ் பெண்ணை நாட் டைச் சேர்ந்தது; பாரதம், பதினேழாம் போர்ச் சருக்கம், 33-ம் கவி பார்க்க. ஆட்கொண்டான் காலம் இற்றைக்கு நானூற்றைம் பது வருடத்துக்கு முன்.

**திருவண்ணமலைச் சம்பந்தன் சமுத்திபாடச் சொல் லச் சொன்னது :—**

வெண்பா

**மன்னுதிரு வண்ணு மலையிற்சம் பந்தனுக்குப்**
**பன்னு தலைச்சவரம் பண்ணுவதேன் — மின்னின்**
**இளைத்த விடைமடவா ரெல்லாருங் கூடி**
**வளைத்திழுத்துக் குட்டா மலுக்கு. (௧0அ)**

கு-பு. இப்பாட்டைப் பிற்காலத்தார் காளமேகப் புலவருக் கேற்றுவர்.

**சம்பராசன் விகடசமுத்தி பாடச் சொல்லப் பாடி யது:—**

கலித்துறை

**எறிக்கும் புகழ்க்கச்சி யேகாம் பரன்சம்ப னெண்டிசைக்கும்**
**பொறிக்கும் புலிக்கொடி யான்புயம் வேட்டபின் பூவையன்னாள்**
**வெறிக்கும் குமக்கொங்கை மீதே விழிசொரி வெள்ளந்துள்ளித்**
**தெறிக்குந் துவலை யழிக்குஞ் சிந்தூரத் திலகத்தையே. ()**

கு-பு. இரட்டையர் பாடிய ஏகாம்பரநாதருலாவில் சம்பன், சம்புபதி, சம்புகுலத்தொருவன், சம்புகுலப் பெருமான் என்று

சுட்டப்படுபவன் இச்சம்பராசனே போலும். இவன் பல்லவ குலத்தைச் சார்ந்தவன்.

சம்பராசனது படைவீடு முற்றியிருந்த பாண்டியனுக்குப் பாடியது:—

வெண்பா

காற்று லலைப்புண்டுங் கண்ணன் கடல்கடைந்தும்
ஏற்று னெடுத்துவளைத் தெய்திளைத்தும் — ஆற்றாத
செம்பொன் மலையன்று சேனுக்கிடங் கொடுக்கச்
சம்பன் மலைகை தவா. (கக0)

ஆற்குழையோ வரவோ வாயர்பாடி யருமனையோ
பாற்கடலோ திங்களோ தங்கு மாவம் பலபலவாம்
மார்க்கமுமாகி நின்றார் மாதைநாதர் வலங்கொள்பம்பை
மேற்கரை கோயில் கொண்டார்புரஞ் சிறிய வெங்கணைக்கே.

இது, ஆறுவிலகிய பாட்டு. (கககே)

கு-பு. இப்பாட்டுத் திருவாமாத்தூர்க் கலம்பகத்தில் வருவது; 61-ம் பாட்டு. இது பாடுமுன் பம்பையாறு ஆமாத்தூரிலுள்ள சிவாலயத்துக்கு மேற்குப் பக்கத்தில் ஓடிக்கொண்டிருந்ததென்றும் இது பாடியபின் ஓரிரவு பெய்த மழையால் ஆறு வழிமாறிச் சிவாலயத்திற்குக் கிழக்காக ஓடலாயிற்றென்றும் கூறுவர்.

திருவாமாத்தூர்க் கலம்பகம் பாடச் சொன்ன போது பாடிய கவி:—

கொச்சகக் கலிப்பா

தொல்காப் பியதேவர் சொன்னதமிழ்ப் பாடலன்றி
நல்காத் திருச்செவிக்கு நாமுரைத்த தேறுமோ
மல்காப் புனறதும்ப மாநிலத்துக் கண்பிசைந்து
பல்காற் பொருளழற்குப் பாற்கடலொன் றீந்தார்க்கே.

கு-பு. பொருள் - புத்திரன். "பாலுக்குப் பாலகன் வேண்டியழுதிடப் பாற்கடலீந்த பிரான்-" என்பது காண்க.

காட்டுவழியிற் போம்போது இளஞ்சூரியர் வினவுக்கு முதுசூரியர் விடை கூறியது:—

வெண்பா

குன்றும் வனமுங் குறுகி வழிநடந்து
சென்றுதிரிவ தென்றுந் தீராதோ — ஒன்றுங்
கொடாதாரைச் சங்கென்றுங் கோவென்றுஞ் சொன்னால்
இடாதோ வதுவே யிது. (௧௧௩)

கு-பு. இளஞ்சூரியர் முதுசூரியர் என்பன இரட்டையர் பெயர். இவர்களில் ஒருவர் முடவரும் ஒருவர் குருடருமா யிருந்தனர் எனவும் குருடர் முடவரைத் தூக்க முடவர் குருடருக்கு வழி யுணர்த்த இவர்கள் செல்வார்களெனவும் ஒரு செய்யுளை ஒருவர் பாதியும் மற்றொருவர் பாதியுமாகப் பாடி முடிப்பார்கள் எனவும் கூறுவர். சங்கு - சங்கநிதி. கோ - காமதேனு.

## செயங்கொண்டான்

செயங்கொண்டாரை அபயன் உமதூர்யா தென்று கேட்டபொழுது சொன்ன கவி:—

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

செய்யும் வினையும் மிருளுண் பதுவுந்
தேனுங் நறவும் மூனுங் களவும்
பொய்யுங் கொலையும் மறமுந் தவிரப்
பொய்தீ ரறநூல் செய்தார் தமதூர்
கையும் முகமும் மிதழும் விழியும்
காலுங் நிறமும் போலுங் கமலங்
கொய்யும் மடவார் கண்வா யதரங்
கோபங் கமழுந் தீபங் குடியே. (௧௧௪)

கு-பு. செயங்கொண்டான் கலிங்கத்துப்பரணி பாடிய புலவன். அபயன் என்றது முதலாங் குலோத்துங்கனை. இவன் கி. பி. 1070-ம் ஆண்டு தொடுத்து 1118-ம் ஆண்டுவரையும் அர

சாண்டவன். தீபங்குடி தஞ்சாவூர் ஜில்லாவில் குழிக்கரை ரயில்வே ஸ்டேஷனுக்கு வடக்கில் ஐந்துமைல் தூரத்தில் உள்ளது.

அபயன்மேற் கோபம் வந்தபோது பாடியது:—

வெண்பா.

காவலரீகை கருதுங்காற் காவலர்க்குப்
பாவலர் நல்கும் பரிசொவ்வா — பூவினிலை
ஆகாப் பொருளை யபயனளித் தான்புகழாம்
ஏகாப் பொருளளித்தேன் யான். (கரு)

செட்டிகள்மேல் இசையாயிரம் பாடியபோது, செக்கார், புகார் தங்களுக்கு ஊர் என்று பாடச்சொல்லப், பாடியது:—

வெண்பா.

ஆடுவதுஞ் செக்கே யளப்பதுவு மெண்ணெயே
கூடுவதுஞ் சக்கிலியக் கோதையே — நீடுபுகழ்க்
கச்சிச்செப் பேட்டிற் கணிக்குங்காற் செக்கார்தாம்
உச்சிக்குப் பின்புகா ரூர். (ககசு)

ஒட்டக்கூத்தர்

சரசுவதி தம்பலங் கொடுக்கக் கவிதையுண்டாகிய கூத்த முதலியாரை, அரும்பைத் தொள்ளாயிரம் பாடும்போது, விக்கிரம சோழன் கேட்டு, ஒரு கவியை யொட்டச் சொல்லென்று சொன்னபோது பாடியது:—

கலித்துறை.

நடித்தது நச்சர வுச்சியி னுச்சி மதிலிலங்கை
பிடித்தது வென்ற திருபது தோள்பதினெண் பகலே
முடித்தது பாரதம் வீரப்புலிவைப்ப மூரிச்செண்டால்
அடித்தது பொற்கிரி விக்கிரமசோழவகளங்கனே. (ககஎ)

கு-பு. இப்புலவர் இயற்பெயர் கூத்தன் என்பது. இவர் பல முறை கவிகளை ஒட்டப்பாடினபடியால் ஒட்டக்கூத்தர் எனப்பட்

டார். விக்கிரமசோழன் முதலாங் குலோத்துங்கன் மகன். இவன் கி. பி. 1118-ம் ஆண்டு தொடுத்து 1143-ம் ஆண்டு வரை அரசாண்டவன். அரும்பைத்தொள்ளாயிரம் அரும்பைத் தொள்ளாயிரம் என்றும் ஏடுகளில் காணப்படுகின்றது.

சோழன் வரிசை யளித்து விடுத்தபோது கூத்த முதலி கூறிய வருப்பு :—

இடுக்கட்புண்படு நிரப்புக்கொண்டுழன்
றிரக்கச்சென்றலின் றெனக்குச்சிங்களந்
திடுக்குற்றஞ்சும்வெஞ் சினத்துச்செம்பியன்
றிருக்கைப்பங்கயஞ் சிறக்கத்தந்தன
படுக்கக்கம்பளம் பரக்கக்குங்குமம்
பதிக்கக்கங்கணம் பரிக்கக்குஞ்சரம்
கடுக்கக்குண்டலங் கலிக்கச்சங்கினங்
கவிக்குப்பஞ்சரங் கவிக்கத்தொங்கலே. (கக-அ)

இந்த விருதுகள் யாருக்கென்றபோது பாடியது:—

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

பத்துக்கொண் டனதிக்கும் பதறிப்போய் முடியப்
பைம்பொற்று ரகைசிந்தப் பகிரண்டத் திடையே
மத்துக்கொண் டமுதத்தைக் கடையாழித் திருமால்
வடிவாகிப் புவிகைக்கொண் டருண்மாறு பரணு
முத்துப்பந் தரினிற்குங் குருளைக்குஞ் சினவேன்
முருகற்கும் பொதியக்கோ முனிவற்கும் பதுமக்
கொத்தற்குஞ் சடிலக்குந் தளருக்கு மல்லாற்
கூழைத்தண் டமிழர்க்கேன் கொடியுங்கா ளமுமே.

விக்கிரமசோழனுலாப் பாடியபோது, இரண்டு கண்ணியை ஒரு பாட்டாகப் பாடென்ற போது, பாடியது :-

வெண்பா

கையு மலரடியுங் கண்ணுங் கனிவாயுஞ்
செய்ய கரிய திருமாலே — வையம்
அளந்தா யகளங்கா வாசிலேமேற் பள்ளி
வளர்ந்தாய் தளர்ந்தாளென் மான். (கஉ0)

கு-பு. 'கையு மலரடியுங் கண்ணுங் கனிவாயுஞ் - செய்ய கரிய திருமால்' என்பது விக்கிரம சோழனுலாவில் 158-ம் கண்ணி.

கவிகளை அறுத்தபோது, சேரனும் பாண்டியனும் பாவமென்று ஓலை வரவிட, இராசா வெட்ட வந்தபோது பாடியது :—

வெண்பா

அன்றையி னு மின்றைக் ககன்றதோ வல்லாது
குன்றெடுத்து நீதிருத்திக் கொண்டாயோ-என்றும்
அடைந்தாரைத் தாங்கு யகளங்கா நீயும்
நடந்தாயோ நாலேந் தடி. (கஉக)

கண்டன் செண்டுவெளியிற் குதிரை யேறியபோது பாடியது :—

வெண்பா

கண்டன் பவனிக் கவனப் பரிநெருக்கால்
மண்டலங் காதே யிருந்தவா — கொண்டிருந்த
பாம்புரவி தாயல்ல பாருரவி தாயல்ல
வாம்புரவி தாய வகை. (கஉஉ)

கு-பு. பரிநெங்கால் என்றும் பாடம். கண்டன்-சோழன். செண்டுவெளி - அரசர்கள் குதிரையிலேறிச் செண்டாடுகின்ற வெளி. செண்டு-ஒருவகைப் பந்து. இக்காலத்து இதனைப் போலோ (polo) என்பர்.

யானை நிகளம் விடுத்தபோது பாடியது:—

வெண்பா

இன்னங் கலிங்கத் திகல்வேந்த ருண்டென்றோ
தென்னன் றமிழ்நாட்டைச் சீறியோ—சென்னி
அகளங்கா வுன்ற னயிரா வதத்தின்
நிகளங்கால் விட்ட நினைவு. (கஉ௩)

கண்டன் துலாபுருடதானம் பண்ணியபோது பாடியது:— கலித்துறை

தொழுகின்ற மன்னர் சொரிந்திட்ட செம்பொற் றுலாத்திடைவண், டுழுகின்ற தார்க்கண்ட னேறிய ஞான்றி னுவாமதிபோய், விழுகின்ற தொக்கு மொரு தட்டுக் காலையில் வேலையில்வந், தெழுகின்ற ஞாயிறொத் தான் குலதீப னெதிர்த்தட்டிலே. (கஉ௪)

கு-பு. ஒருவனுடைய நிறையளவு பொன்னையோ வெள்ளியையோ வேறு விலையுயர்ந்த பொருள்களையோ ஒரு பிராமணனுக்குத் தானஞ் செய்வது துலாதானம் அல்லது துலாபுருட தானம் எனப்படும். துலையில் ஒருவனுக்குச் சமமாகப் பொன் முதலியவற்றை இட்டு நிறுப்பதைத் துலாபாரம் தூங்குதல் என்ப.

தேவி ஊடலாய்க் கதவடைத்தபோது பாடியது:—

கலித்துறை

கரத்துஞ் சிரத்துங் களிக்குங் களிற்றுடைக் கண்டன்வந்தான், இரத்துங் கபாட மினித்திறப்பாய் பண்டிவனணங்கே, உரத்துஞ் சிரத்துங் கபாடந் திறந்திட்ட துண்டிலங்கா, புரத்துங் கபாட புரத்துங் கல்யாண புரத்தினுமே. (கஉ௫)

கு-பு. கபாடபுரம் பாண்டிநாட்டின் பழைய தலைநகர். கல்யாணபுரம் சளுக்க வேந்தருடைய ராஜதானி; வடக்கே நைசாமி ராச்சியத்திலுள்ளது.

கவிகளை அறுத்தபோது புலவரெல்லாரும் வெகுளப் பாடியது:—

கலித்துறை

பாட்டுத் தொடுக்கும் புலவோர்க்குக் கூத்தன் பயப்படல்பே
தாட்டுக் கடற்புவி யஞ்சலன் றேவறுத் துக்கிடந்த
சூட்டுக் கதிர்க ணிலத்தடங் காமற் றெருகுத்துமள்ளர்
மேட்டுக் குவாலிடும் பொன்னி நன்னாடுடை வேற்கண்டனே. ()

கவிஞரை வெட்ட வேண்டாமென்று நெற்குன்றவாண முதலியார் பாடியது:—

கலித்துறை

கோக்கண்ட மன்னர் குரைகடற் புக்கிலர் கோகனகப்
பூக்கண்ட கொட்டியும் பூவா தொழிந்தில பூவில்விண்ணோர்
காக்கண்ட செங்கைக் கவிச்சக்ர வர்த்திநின் கட்டுரையாம்
பாக்கண் டொளிப்பர்களோ கவிபாடிய பாவலரே. ()

கு.- பு. இந்நெற்குன்றவாணமுதலியார் திருப்புகலூரந்தாதி பாடியவர்போலும். தொண்டைமண்டல சதகத்தில் 26-ம் கவியும் 83-ம் கவியும் பார்க்க.

ஒட்டக்கூத்தன் பாதி சோழன் பாதி பாடியது:—

கலித்துறை

ஆடுங் கடைமணி நாவசை யாம லகிலமெல்லாம்
நீடுங் குடையிற் றரித்தபிரா னென்றும் நித்தநவம்
பாடுங் கவிப்பெரு மாளொட்டக் கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங் குலோத்துங்கச் சோழனென் றேயென்னைச் சொல்லுவரே.

கு-பு. இந்தக் குலோத்துங்கன் விக்கிரம சோழன் மகன்; இரண்டாங் குலோத்துங்க னென்றும் குமாரகுலோத்துங்கனென்றும் சொல்லப்படுபவன். இவன் பன்னிரண்டாம் நூற்றாண்டின் நடுவில் அரசு செய்தவன்.

உலாப் பாடியபோது பேராசிரியர் நேமிநாதர் பட்டோலை பிடிக்கப் பாடியது:—

விருத்தம்

செங்கான்மட வன்னம்படர் நீயாமென வெருவிச்
சிறையிற்பெடை மறையக்கொடு திரியத்திரள் கமுகின்
பைங்காய்மர கதமீது படர்ந்தேறி நறுந்தண்
பாளைக்கிடை பவளக்கொடி படர்காவிரி நாடா
தங்காதலி யருமைந்தரு முடனுக வணங்கித்
தலைகாவெம துடல்காவெம துயிர்காவக ளங்கா
கொங்காமன துங்காவென மதுரேசர் வணங்குங்
கொல்யானைய பங்காவிவள் குழலோசை பொறுளே.

கு-ட. பேராசிரியர் நேமிநாதர் என்பது ஒருவர் பெயரே போலும். பேராசிரியராகிய நேமிநாதர் என்க. இவர் தொல்காப்பியத்திற் குறையெழுதிய பேராசிரியரல்லர். அவர் ஆத்திரையன் பேராசிரிய னெனப்படுவோர். அவர் இயற் பெயர் மகேசுவரர் போலும். இவர் நேமிநாதஞ் செய்தவருமல்லர்; நேமிநாதஞ் செய்தவர் குணவீர பண்டிதர்.

ஒட்டக் கூத்தர் என்னும் தலைப்பின்கீழ் வரும் ஏனைப் பாட்டுக்கள்போல இதுவும் ஒட்டக் கூத்தர் பாடியதேயாம். நேமிநாதர் பட்டோலை பிடிக்க இதனைப் பேராசிரியர் பாடினர் என்று கொள்வது பொருந்துவதாகக் காணவில்லை.

இராசாவுக்கு வேளையேதென்று கேட்ட சோமனுக்குச் சொல்லியது:—

வெண்பா

தன்னுடைய தேவியர்க்குத் தார்வளவன் றானுரைப்ப
துன்னுடைய கீர்த்தி யுயர்நலமே — துன்னுபுகழ்ச்
சோமா திரிபுவனத் தோன்றலே நின்புகழை
யாமா றுரைக்க வினி. (கஅ௦)

கு-பு. சோமன் என்பவன் திரிபுவனம் என்னும் ஊரிலிருந்த ஒரு பிரபு; ஒட்டக் கூத்தரைப் பழிகாரர் கையினின்று தப்புவித்த வன். திரிபுவனம் தஞ்சாவூர் ஜில்லாவில் கும்பகோணத்திலிருந்து திருவிடை மருதூருக்குப் போகும் வழியில் திருநாகேசுரத்திற்குச் சமீபத்திலுள்ளது.

பழிகாரர் தொடர்ந்தபொழுது சோமன் வாசலில் ஓடிச் சொன்ன கவி:—

வெண்பா

அடையென்பார் தள்ளென்பா ரன்பொன்றில் லாமற்
புடையென்பார் தங்கடைக்கே போகேங்- கொடையென்றால்
முந்துஞ்சோ மாபுவனை முன்னவனே நின்கடைக்கீழ்
வந்துய்ஞ்சோ மாதலான் மற்று. (கஙக)

கு-பு. புவனை - திரிபுவனம்.

கூத்தன் மாணாக்கன் பாடிய அந்தாதிச் சமூத்தி:-

கலிப்பா

மாவுறங்கின புள்ளுறங்கின வண்டுறங்கின தண்டலைக்
காவுறங்கின வின்னமென் மகள் கண்ணுறங்கிலள் கையணைக்
கோவுறங்கு கடைத்தலைக்குல தீபவள்ளை குதட்டநின்
றூவுறங்கு புகாரசஞ்சல வஞ்சலென்ன வடுக்குமே (கஙஉ)

இரண்டாமடி அம்பிகாபதி பாடியது:—

விருத்தம்

ஏகா வடமென் னிருகொங் கையின்மேல்
ஆகா வடமான தறிந்திலையே
தியாகா பரணு திசையா னைகளின்
பாகா பரராச பயங்கரனே. (கஙங)

கு-பு. இப்பாட்டு எந்தச் சமயத்தில் பாடினதென்பது விளங் கவில்லை. இரண்டாமடி பாடின அம்பிகாபதி கம்பருடையமகனோ அல்லனோ என்பதுந் தெரியவில்லை. தமிழில் தண்டியலங்கார மியற்றிய தண்டி என்பவர் தமது நூலில்

"சென்று செவியளக்குஞ் செம்மையவாய்ச் சிந்தையுள்ளே
நின்றளவி லின்ப நிறைப்பவற்றுள் — ஒன்று
மலரிவருங் கூந்தலார் மாதர்நோக் கொன்று
**மலரிவருங் கூத்தன் றன்வாக்கு"**

என்று ஒட்டக் கூத்தர் பாட்டைப் புகழ்ந்திருத்தலினால், இங்கே கூறப்பட்ட அம்பிகாபதி அவருடைய தந்தையாகிய அம்பிகாபதியே போலும். இவர் ஒட்டக் கூத்தருக்கு மாணக்கராகல் வேண்டும்; இல்லையாயின், உற்ற நண்பினராகல்வேண்டும்.

இராசா கை கொடுத்தபோது பாடியது:—

கலித்துறை

கொலையைத் தடவிய வைவே லரக்கர் குலமடியச்
சிலையைத் தடவிய கையே யிதுசெக தண்டத்துள்ள
மலையைத் தடவிய விந்தத் தடவி மலைந்தவொன்னார்
தலையைத் தடவி நடக்குங்கொல் யானைச் சயதுங்கனே

மடையனைத் தண்டஞ்செய்ததை விலக்கப் பாடியது:—

கலித்துறை

மீனகம் பற்றிய வேலையு மண்ணையும் வெற்படங்கப்
போனகம் பற்றிய மாலல்லை யோபொருந் தாவரசர்
கானகம் பற்றக் கனவரை பற்றக் கலங்கள்பற்ற
வானகம் பற்ற வடிவேல் விடுத்த மனதுங்கனே. (கரு)

அரியைப் பாடவேண்டுமென்னப் பாடியது:—

கலித்துறை

ஆரே யெனுமொன்று சொல்லத் தொடங்கினு மவ்விடத்தும்
பேரே வருமென்ன பேறுபெற் றேன்பெரு நான்மறையின்
வேரே யிதிலையின் மின்னுட னேவெய்ய கானடந்த
காரே கடல்கொளுந் தச்சிலை வாங்கிய காகுத்தனே ()

கு-பு. ஒட்டக் கூத்தர் சரிதத்தைச் செந்தமிழ் இரண்டாந் தொகுதி, கஉ-ம் பகுதியிற் காண்க.

## புகழேந்தி

புகழேந்தியார் பாடியது :-

கலித்துறை

சத்தம் பயிலும் புலவோர் கவித்தண் டோட்டப்புக்க
பித்த னிவனென்ப னென்னைக்கண் டாய்பிழைத் தக்கணத்தே
தத்த முதுகிட்ட தெவ்வேந்தர் தங்கள் தடமகுட
சத்த மவசத்த மாகுங்கொல் யானைச் சயதுங்கனே. ()

தேவி ஊடலாய்க் கதவடைத்தபோது பாடியது:-

கலித்துறை

தூயன் கமழும்பைங் கோதையன் விக்ரம சோழன்மன்னர்
தீயன் புறங்கடை வந்துநின் றானின் றிருப்புருவச்
சாபங் குனிய விழிசிவப் பத்தலை சாய்த்துநின்ற
கோபந் தணியன்னமே யெளிதோநங் குடிப்பிறப்பே ()

இழையொன் றிரண்டு வகிர்செய்த நூற்றொருன் றிணையுமிடைக்
குழையொன் றிரண்டுசெட் கொம்பனை யாய்கொண்ட கோபந்தவிர்
மழையொன் றிரண்டுகைம் மான பரன்கண்டன் வாசல்வந்தால்
பிழையொன் றிரண்டு பொறுப்பதன் றோகடன் பேதையர்க்கே.

நானே யினிச்சொல்லி வேண்டுவ தில்லை நளினமலர்த்
தேனே கபாடந் திறந்துவிடாய் செம்பொன் மாரிபொழி
மானே ரபய னிரவி குலோத்துங்கன் வாசல்வந்தால்
தானே திறக்குநின் கைம்மல ராகிய தாமரையே. (கசo)

இராசா துலாபுருட தானம் பண்ணியபோது பாடியது :-

வெண்பா

பொருந்த வொருதட்டு மேருப் புகினும்
இருந்த வொருதட் டெழாதால் — திருந்து
மறைபுக்க சொல்லபயா வன்புறவுக் காக
நிறைபுக்க தெவ்வாறு நீ. (கசக)

## சூதில் தேவியை உயர்த்திப் பாடியது:—

கலித்துறை

மொழியும் புகழு மெவர்க்குமுண் டாமிந்தப் பாரினனக்
கொழியுஞ் சிலையுங் கயலுமன் றேவக ளங்கதுங்க
மொழியும் பொழுதெங்கள் பெண்சக்ர வர்த்தி முகத்திரண்டு
விழியும் புருவமு மாகியிப் போதுன்னை வெல்கின்றவே.

கு-பு. புகழேந்திப் புலவர் சரிதத்தைச் செந்தமிழ் இரண்டாந் தொகுதி, கஉ-ம் பகுதியிற் காண்க.

சார்வபௌமபாண்டியன் உண்டி நிமித்தமாகக் கோபித்து ஆரிய சேகரன் வாசலிலேயும் இந்தக் குறும்பு செல்லுமோ என்னப் பாடிய

வெண்பா

கவியரசர் தம்முனிவு கண்டாற் புகழ்கொள்
புவியரசர் சீறூர் பொறுப்பர் — கவியரசர்
உன்றல் முனியி லவர்பொறு ரோதுமவர்க்
கென்னாடுஞ் செல்லாத தில். (கசரு)

கு-பு. இது முதல் எழுகவியும் புகழேந்தியார் பாடினதானால், அவர் இலங்கை சென்றிருந்தவரெனவும், அங்குள்ள கண்டி, கொழும்பு, கதிர்காமம் முதலிய ஊர்களுக்குப் போனவரெனவும், இலங்கையில் அரசாண்ட சிங்கையாரியச் சக்கரவர்த்தி காலத்தவ ரெனவும் ஏற்படும். சிங்கையாரியச் சக்கரவர்த்தி காலம் பதின் மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதி. புகழேந்தியார் காலம் பதின் மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியாயின், அவர் ஒட்டக் கூத்தரோ டொரு காலத்திருந்தவ ராகார்.

தேவாரம்பாடிய திருஞானசம்பந்தர், சுந்தரர், திருப்புகழ் பாடிய அருணகிரி நாதர், மகாராஜாதுறவு பாடிய குமார தேவர் முதலிய பல புலவர்கள் இலங்கை சென்றிருந்ததாக அவர்களுடைய பாடல்களால் தெரிகின்றது.

ஆரிய சேகரனிடத்திற் போயிருந்து புத்த சமயத்திற் கடகம் யானை வாங்கி மீண்டு மதுரையில்வந்து பாண்டியன் வரிசையளிப்ப இருந்தபின் ஆரியசேகரன் பட்டானென்று கேட்டபோது பாடிய கவி:-

வெண்டா

அஆ விதியோ வடலா ரியர்கோமான்
எஏ வலரா விழிந்தநாள் — ஒஓ
தருக்கண் ணிலுங்குளிர்ந்த தண்ணளி தந்தாண்ட
திருக்கண் ணிலுஞ்சுடுமோ தீ. (கசச)

கதிர்காமத்து வேலர்முன் பாம்பை மயில் விடப் பாடியது:-

வெண்பா

தாயரவை முன்வருத்துஞ் சந்த்ரோ தயந்தனக்குன்
வாயரவை விட்டுவிட மாட்டாயோ — தீயரவைச்
சீறு மயிற்பெருமாள் தென்கதிர்கா மப்பெருமாள்
ஏறு மயிற்பெருமா ளே. (கசரு)

கு-பு. கதிர்காமம் என்பது இலங்கையிலுள்ள பிரசித்திபெற்ற சுப்பிரமணியஸ்தலம்; அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ்பெற்றது.

இராசாவைப் பாடாமல் ஒட்டக்காரனைப் பாடியது:-

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

கயக்காவி நாறுங் கொழும்பிற்பிர சண்டா
காரோர்கொ டைச்செங்கை யாரோதன்மைந்தா
இயக்காநின் மார்பிற் செழும்புன்னை யந்தார்
இப்போது நீநல்கி லென்பேதை தன்மேற்
சயக்காம வேளம்பு தையாது முத்தின்
தாமஞ்சுடா சந்தனம் பூசினாலுந்
தியக்காது வேயுஞ் செவிக்கும் பொறுக்குந்
தீயென்று மூளாது திங்கட் கொழுந்தே. (கசசு)

கு-பு. கொழும்பு இப்போது இலங்கைக்குப் பிரதான பட்டணமாயுள்ளது.

பாண்டியன் வாசலில் வந்து அவன் புறப்படவில்லையென்று பழியாகப் பாதி பாடி, அவன் வந்து வணங்கப் புகழாகப் பாதி பாடியது :—

கலித்துறை

எண்ணீர்மை நூலுக் ககத்திய னுமிவ னென்பதெல்லாம்
வெண்ணீர்மை யன்றி விரகல்ல விக்ரம மாறன்செஞ்சொற்
பண்ணீர்மை தேரும் பராக்ரம மாறன் பதங்கழுவுந்
தண்ணீர் குடித்தல்லவோ கும்பயோனி தமிழ்கற்றதே.

ஆரியசேகரன் ஆனைமேல் ஆயிரம் பொன்னும் வரவிட, அந்த யானையைப் பாண்டியன் வந்து கேட்கப் பாடியது:—

கலித்துறை

பாவலன் வாசலில் வந்திபம் வாங்கப் படிபுரக்குங்
காவலர் நிற்கும் படிவைத்த வாகண்டி யொன்பதினும்
மேவலர்மார்பினுந் திண்டோளினுஞ் செம்பொன்மேருவினுஞ்
சேவெழுதும் பெருமாள் சிங்கையாரிய சேகரனே. ()

கு-பு. கண்டி சிங்களவரசர் தமிழரசர் காலங்களில் இலங்கைக்கு இராஜதானியா யிருந்தது; இப்போது மத்திய மாகாணத்துக்குத் தலை நகராயுள்ளது.

சித்திரத் தனுமனைப் பாடச்சொல்லப் பாடியது:—

கலித்துறை

புராதனமெண்ணுங் கவிப்புலவீ ரிந்தப் புன்குரங்கு
மராவனம்விட்டிங்கு வந்ததென்னே வந்தவாறு சொல்வேன்
தராதல மெண்ணுந் தமிழ்மா றனையுமித் தம்பியையும்
இராகவ னென்று மிலக்குவ னென்றுமிங் கெய்தியதே.()

வேம்பத்தூரார் சமுத்தி சொல்லப் பாடியது:—

வெண்பா

இந்து நுதலழ கோரகுரா மாவிவட்குக்
கொந்து முடிமுகிலோ கோவிந்தா-வெந்திறல்சேர்
வேலோ விழியிரண்டும் வேங்கடவா ணுவயிறும்
ஆலிலையோ நாரா யணா. (கூ௦)

மூவேந்தர்

பழையனூரார் பழிதீர்த்த தீக்குழி அவியாதெரிய மூவேந்தரும் வந்து பார்த்துப் பாடியது:—

வெண்பா

யாவரே காராளர் யாவ ரிணையாவார்
நாவலோ நாவலோ நாவலோ — சோவைப்
பொருப்பா ளளித்தார்க்குப் போதுமே யுண்மை
நெருப்பா லமைத்தார்க்கு நேர்.

இது சேரன். (கூக)

எல்லை பலகடந்திட் டெங்கும் புகழ்பூத்துத்
தொல்லை மனுக்காக்கத் தோன்றிற்றே — கொல்லை
வழியிலொரு பேய்நின்று வஞ்சனையாற் செய்த
குழியிலெழு செந்தீக் கொழுந்து.

இது சோழன். (கூஉ)

பிழைத்தாரோ காராளர் பேய்மகள்சொற் கேட்டுப்
பிழைத்தார்க ளல்லர்பிழை தீர்ந்தார்—பிழைத்தார்கள்
எல்லாருங் காண வெரியகத்தே மூழ்கினர்
எல்லாரு மின்று முளர்.

இது பாண்டியன். (கூங)

கு-பு. பழையனூரில் ஒரு வேளாளன் இருந்தான். அவனுக்கோர் ஆண் குழந்தையும் ஒருபெண் குழந்தையும் இருந்தன. பெண்

குழந்தை இறந்து திருவாலங்காட்டில் பேயாய்த் திரிந்துகொண்டிருந்தது. ஒருநாள் காஞ்சிபுரத்து வணிகன் ஒருவன் அந்தக் காட்டு வழியே தனித்துச் சென்றபோது, அந்தப் பேய் அவனுடைய மனைவியைப் போல வடிவு கொண்டு, அவனைத் தொடர்ந்தது. அவன் அதனைப் பேயென்று அறிந்து கொண்டு அதன் வார்த்தைக் கிணங்காது சென்றான். அந்தப் பேய் அவனைப் பழையனூருக்குத் தொடர்ந்து சென்று, அங்கே அம்பலத்திற் கூடியிருந்த வேளாளரிடத்தில் அவன் தனது கணவனென்றும் தன்னைக் காரணமின்றி விட்டுச் செல்லுகின்றானென்றும் முறையிட்டது. அவர்கள் "நீ இவன் மனைவி என்பதற்குச் சாட்சி யாது?" என்று வினவப், பேய் "எனது குழந்தையே சாட்சி; இதனை இதோ விடுகின்றேன்; இது போய்த் தந்தையின் மடிமீது ஏறுகிறதோ இல்லையோ? பாருங்கள்" என்று சொல்லித் தன் ஒக்கலையிலிருந்த குழந்தையைக் கீழே விட்டது. குழந்தை சென்று வணிகனை அப்பாவென்றழைத்து அவன் மடி மீதேறிற்று. அதனைக்கண்ட வேளாளர்கள் வணிகனை அப்பேயை ஏற்றுக்கொள்ளும்படி சொன்னார்கள். வணிகன் அது பேயென்று மீட்டும் மறுக்க, வேளாளர்கள் "இது பேயானால் நாங்கள் பிணையாவோம்" என்று சொல்லிப் பேயை அவனுடன் கூட்டியனுப்பினார்கள். பேய் அவ்விடத்தேயே அவனுடன் ஓரறையுட் புகுந்து அவன் உயிரைக் குடித்து மறைந்தது. அதனைக்கண்ட அம்பலத்து வேளாளர்கள் தங்கள் சொற்படி தீப்பாய்ந்து தங்கள் பழியைத் தீர்த்தனர் என்ப.

இக்கதை "வஞ்சம் படுத்தொருத்தி வாணாள் கொள்ளும் வகை கேட்டஞ்சும் பழையனூ ராலங் காட்டெம் மடிகளே" என்று திருஞானசம்பந்த சுவாமிகளால் தமது தேவாரத்துக் குறிப்பிக்கப் பட்டது மன்றி,

> மாறுகொடு பழையனூர் நீலி செய்த
> வஞ்சனையால் வணிகனுயி ரிழப்பத் தாங்கள்
> கூறியசொற் பிழையாது துணிந்து செந்தீக்
> குழியிலெழு பதுபேரு முழுகிக் கங்கை
> ஆறணிசெஞ் சடைத்திருவா லங்காட் டப்ப
> னண்டமுற நிமிர்ந்தாடு மடியின் கீழ்மெய்ப்

பேறுபெறும் வேளாளர் பெருமை யெம்மாற்
பிரித்தளவிட் டிவளவெனப் பேச லாமோ"

என்று உமாபதி சிவாசாரியரால் சேக்கிழார் புராணத்தும் கூறப்பட் டிருக்கின்றது. தொண்டைமண்டல சதகம் 8-ம் பாட்டும் பார்க்க.

அச்சுத களப்பாளன் தளையிட்டபோது பாடியது:—

வெண்பா

தினைவிளைத்தார் முற்றந் தினையுணங்குஞ் செந்நெல்
தனைவிளைத்தார் முற்றமது தானுங் — கனைசீர்
முரசுணங்கச் சங்குணங்கு மூரித்தேர்த் தானை
அரசுணங்கு மச்சுதன் முற்றத்து.

இது சேரன். (கநச)

அரச குலதிலக னச்சுதன்முற் றத்தில்
அரச ரவதரித்த வந்நாள் — முரசதிரக் [யை
கொட்டிவிடு மோசையினுங் கோவேந்தர் காற்றளை
வெட்டிவிடு மோசை மிகும்.

இது சோழன். (சநரு)

குறையுளா ரெங்கிரார் கூர்வே லிராமன்
நிறையாறு திங்க ளிருந்தான் — முறைமையால்
ஆலிக்குந் தானை யலங்குதா ரச்சுதமுன்
வாலிக் கிளையான் வரை.

இது பாண்டியன். (கநசு)

பாண்டியனிது பாடியபின்பு ஒருவிலங்கு கூடப் போடப், பின்பு பாடியது:—

குடகர் குணகடலென் றார்த்தார் குடகர்க்
கிடவர் வடகடலென் றார்த்தார் — வடகடலர்
தென்கடலென் றார்த்தார்தென் றில்லையச்சு தாநின்றன்
முன்கடைநின் றார்க்கு முரசு. (கநஎ)

கு-பு. இந்த அச்சுத களப்பாளர் யார் என்பதும் யாதுகாரணத்தினால் இவர் மூவேந்தரையும் சிறையிலிட்டாரென்பதுந் தெரியவில்லை. தமிழ்நூல்களால் அறியப்படும் அச்சுதகளப்பாளர் ஒருவர் உளர். அவர் சைவசமய சந்தான குரவர்களுள் முதல்வரும் சிவஞானபோதகர்த்தாவுமாகிய மெய்கண்ட தேவருடைய தந்தையார்; பன்னிரண்டாம் நூற்றாண்டின் கடையிலும் பதின்மூன்றாம் நூற்றாண்டின் முதலிலும் நடு நாட்டிலே திருக்கடந்தை என்னும் திருப்பெண்ணாகடம் என்றும் சொல்லப்படும் திருத்தூங்கானைமாடத்திலிருந்தவர். அவர் வேளாளர். இங்கே கூறப்படும் அச்சுதகளப்பாளரை, "அரசகுலதிலகனச்சுதன்" என்பதனால், இராஜவமிசத்தவர் என்று கொள்ளவேண்டியிருக்கின்றது. "தென்றில்லை அச்சுதன்" என்பதனால் அவனூர் சிதம்பரமாகும்.

## சேரன்

சேரன் கணைக்காலிரும்பொறை, செங்கணாற் குடவாயிற் கோட்டத்துத் தளைப்பட்டபோது, பொய்கையாருக் கெழுதி விடுத்த பாட்டு:—

ஆசிரியப்பா

குழவி யிறப்பினு மூன்றடி பிறப்பினும்
ஆளன் றென்று வாளிற் றப்பார்
தொடர்ப்படு ஞமலியி னிடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத்
தாமிரந் துண்ணு மளவை
ஈன்ம ரோவிவ் வுலகத் தானே. (கரு-அ)

இது கேட்டுப் பொய்கையார் களவழி நாற்பது பாடச், செங்கணான் சிறைவிட் டரசளித்தான்.

கு-பு. இது புறநானூற்றில் வருவது; எச-ம் பாட்டு. அங்கே இது "சேரமான் கணைக்காலிரும்பொறை, சோழன் செங்கணானோடு போர்ப்புறத்துப் பொருது, பற்றுக்கோட்பட்டுக், குடவாயிற்

கோட்டத்துச் சிறையிற் கிடந்து, தண்ணீர் தாவென்று பெறாது, பெயர்த்துப் பெற்றுக், கைக்கொண்டிருந்து உண்ணான் சொல்லித் துஞ்சியபாட்டு'' என்று கூறப்பட்டுளது. புறநானூற்றுக் குறிப்புக் காலத்தால் முந்தினதாதலின், அதுவே கொள்ளத்தக்கது. பொய்கையார் களவழி பாடிச் சிறைவீடு கொண்டது வேறொரு சேரனைப்போலும். ஆராய்ச்சியின்மேற் றனை வாயிற்றப்பார் என்றும் பாடம்.

## பாண்டியன்

பாண்டியன் நெடுஞ்செழியனைச் சேரனும் சோழனும் சிறியனென்றிகழ்ந்திடப் பொய்கையார் வந்து கூறக்கேட்ட நெடுஞ்செழியன் கூறின வஞ்சினக்காஞ்சி:-

அகவல்

நகுதக்கனரே நாடுமீக் கூறுநர்
இளைய னிவனென வுளையக் கூறிப்
படுமணி யிரட்டும் பாவடிப் பணைத்தாள்
நெடுநல் யானையுந் தேரு மாவும்
படையமை மறவரு முடையம் யாமென்
றுறுதுப் பஞ்சா துடல்சினஞ் செருக்கிச்
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொ
டொருங்கப் படேஎ னாகிற் பொருந்திய
என்னிழல் வாழ்நர் சென்னிழற் காணாது
கொடியனெம் மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலே னாகுக
ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் றலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் னிலவரை
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க் கீயா வின்மையா னுறவே. (கஎஉ)

கு-பு. இது பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பாட்டு; புறநானூறு, எ௨. மாங்குடி மருதனார் பத்துப் பாட்டு ளொன்றாகிய மதுரைக்காஞ்சி பாடினவர்; மாங்குடி கிழார் என்றும் சொல்லப்படுவர்.

பாண்டியன் கழாய்க் கூத்துப் பார்க்குமிடத்தில் பராமுகமாகக், கூத்தாடினவள் கோபித்துக்கொண்டு விழுங்கால் பாடியது:—

கலித்துறை

மாகுன் றனையபொற் றோளான்
வழுதிமன் வான்கரும்பின்
பாகென்ற சொல்லியைப் பார்த்தென்னைப்
பார்த்திலன் பையப் பையப்
போகின்ற புள்ளினங் காள்புழற்
கோட்டம் புகுவ துண்டேல்
சாகின்றன ளென்று சொல்லீ
ரயன்றைச் சடைய னுக்கே. (சகூ0)

கு-பு. இப்பாட்டுத் தொண்டை மண்டல சதகம் 33-ம் செய்யுளில் எடுத்துச் சொல்லப்பட்டுளது. பாண்டியன் முன் கழைக் கூத்தி ஒருத்தி விச்சுளிப் பாய்ச்சல் என்னும் அரிய வித்தையை ஆடினபோது அவன் பராமுகமாக இருந்துவிட்டுப் பெயர்த்தும் அதனை ஆடச் சொல்ல, அரசனாணையை மறுத்தற்கஞ்சி ஆடுபவள், அதனால் தன் உயிர்க்கு நாசம் வருமென்று கண்டு, இப்பாடலைச் சொன்னாள் என்ப. புழற் கோட்டம் என்பது தொண்டை மண்டலத்திலுள்ள இருபத்து நான்கு கோட்டங்களுள் ஒன்று. மேலே கூ௨-ம் பாட்டில் வந்த புழல் என்னுமூரால் பெயர் பெற்றது. புலியூர்க் கோட்டத்துக்கு அடுத்து வடக்கேயும் பையூர்க் கோட்டத்துக்குத் தெற்கேயு முள்ளது. ஞாயிறு, அம்பத்தூர், ஆவடி, ஆற்றூர், எழும்பூர், சென்னைநகர் முதலியன இக் கோட்டத்திலுள்ள ஊர்கள்.

பாண்டியன் இந்தக் கவிதை கேட்டுச் சோதிக்கச் சிலரை விடுக்க, அவன் கூலி முதுகிற் சோறிட்டபோது பாடியது :—

அகவல்

இரவலாளரே பெருந்திருவுறுக
அரவமிழ் மணியு மலைகடலமுதுஞ்
சிங்கப் பாலுந் திங்கட் குழவியும்
முதிரை வாலுங் குதிரை மருப்பும்
ஆமை மயிரு மன்னத்தின் பேடும்
ஈகென விரப்பினு மில்லென வறியான்
சடையனை யயன்றைத் தலைவனை
உடையது கேண்மி னுறுதியா ராய்ந்தே (கசுக)

கு-பு. இங்கே 'அவன்' என்றது அயன்றைச் சடையனை. கூலி முதுகிற் சோறிட்டது "அன்று கூலிமுது கன்னமிட்டவ னெனன்னை கூன்முது கழிக்கிலான்" என்று ஆறைக் கலம்பகத்திலும் "கூலி முதுகிற் சுடச்சுடவப் போதுசமை-பாலடிசி றன்னைப் படைக்குங் கை" எனத் திருக்கை வழக்கத்திலுங் (கஉ-ம் கண்ணி) கூறப்பட்டுளது. முதிரை - அவரை துவரை முதலிய; அவற்றிற்கு வாலில்லை.

தொண்டைமண்டலத்துவேளாளரைப் பாடியது:—

விருத்தம்

வையம் பெறினும் பொய்யுரைக்க
மாட்டார் தொண்டை நாட்டாரென்
றையன் களந்தைப் புகழேந்தி
யாண்டா னுரைத்த வவரோநீர்
எய்யுஞ் சிலைவேள் வடிவோனே
யிராசாதிபனே யிரப்போர்கள்
ஐயந் தவிர்த்த பெருமானே
யாவோ மடியோ மாவோமே.

இது பின்னிரண்டடி வேளாளர் பாடியது. (கசுஉ)

கு-பு. இந்தப் பாட்டுத் தொண்டை மண்டல சதகம் கஎ-ம் செய்யுளில் எடுத்துக் கூறப்பட்டுளது. புகழேந்தி செஞ்சிக்குத் தலைவனாகிய கொற்றங்கை என்பவனைப் பாடிய கலம்பகத்தில் "வையம் பெறினும் பொய்யுரைக்க மாட்டார் தொண்டை நாட்டார்" என்று கூறினர். அச் செய்யுள் வருமாறு —

"நையும் படியென் னைங்கொற்ற நங்கோன் செஞ்சி வரைமீது
ஐயம் பெறுநுண் ணிடைமடவா யகிலின் றூப முகிலன்று
பெய்யுந் துளியோ மழையன்று பிரசத் துளியே பிழையாது
வையம்பெறினும் பொய்யுரைக்க மாட்டார் தொண்டை நாட்டாரே."

அறம் வளர்த்த முதலியாரைப் பாண்டியன் கலம்பகம் பாடலாமோ என்ற புலவர்க்குக் கூறியது:—

கலித்துறை

உங்கண் மனந்தெரியும் புலவீரொருசீர் மரபோன்
திங்கண் மரபினத் திங்களின் கூடச் செம்பூரறமா
தங்கன் மரபினிற் கங்கையுஞ் சூடினன் சோதியன்றே
எங்கண் மரபுண் டெனக் கவிபாடினம் யாமவற்கே.

கு-பு. இப்பாட்டு மிகவும் பிழைபட்டுக் கிடக்கின்றது. முதலடியில் 'மரபெண்' என்றும், இரண்டாமடியில் 'திங்கண் மரபுமத் திங்களின்' என்றும் 'கூடற் செம்பூரறமால்' என்றும், நாலாமடியில் 'மரபொன்றெனு' என்றும் பாடபேதமுள. அறம் வளர்த்த முதலியார் யாரென்பது விளங்கவில்லை.

விட்டல ராசாவைப் பாடியது:—

வெண்பா

தொட்டிலிருக்கத் தொடங்கிய நாண்முதலாய்
அட்டதிக்கு நின்குடைக் கீழாயிற்றே—விட்டலயா
தன்குமரி யன்றித் தனிக்குமரி கொள்ளாநீ
தென்குமரிக் கேகுவதென் செப்பு. (கஙச)

கு-பு. இப் பாட்டும் பாண்டியனே பாடினது போலும். இந்த விட்டல ராசா விஜய நகரத்து ராஜ வமிசத்தைச் சார்ந்தவர். இவர்

சதாசிவராயர் (1542-1567) காலத்திருந்தவர். தஞ்சாவூர் ஜில்லாவில் கோவிலடி என்னு மூரிலுள்ள கல்வெட்டும் தோசூரி கோனேரு கவிசெய்த தெலுங்குப் பாலபாகவதமும் இவரைச் சந்திரவமிசத்த வரொன்றும் ஆரவீடு-புக்கராஜனின் பெரும்பேரன் என்றும் கூறு கின்றன. ஆரவீடு-புக்கராஜன் மகன் ராமராஜன்; ராமராஜன் மகன் திம்மராஜன்; திம்மராஜன் மகன் விட்டலராஜன். விட்டலராஜன் சகோதரனாகிய சின்ன திம்மராஜ னென்பவன் சந்திரகிரியை ஆண்டுகொண்டிருந்ததாகக் கல்வெட்டுக்களால் தெரிகின்றது. வீரப்பிரதாப ஸ்ரீ மகா மண்டலேஸ்வர ராமராஜ திம்மராஜ விட்டல தேவ மகாராஜா என்பது விட்டலராஜாவுடைய முழுப் பெயர். திருவிடை மருதூரிலுள்ள கல்வெட்டொன்று, சக வருஷம் சசுகூகூ-ல் (கி. பி. 1544-45) வெட்டப்பட்டது, இவர் அநந்த சயனத்துக்கு(திருவாங்கூருக்கு)ப் படை யெடுத்துச் சென்றதாயும், இவருடைய சேனை தெற்கிலுள்ள அநந்த சயனந் தொடுத்து வடக்கில் (நைசாம் தேசத்தில்) உள்ள முதுகல் வரைக்குஞ் சண்டைசெய்து ஊர்களைப் பிடித்ததாயும், இவர் திருவிடை மருதூர்த் திருச்சிற்றம்பலத்தான் என்பவன் வேண்டுகோளின்படி, திருவிடை மருதூர்ச் சிவன் கோயிலுக்குரிய ஆவணம் சிற்குடி என்னும் இரண்டு கிராமங்கள், மறுபேர் கைப்பட்டிருந்ததை, விசாரணை செய்து அவற்றின் எல்லைக்கல்லில் மருதபபேசுரர் முத்திரை யிட்டிருந்தமைகண்டு, சிவன் கோயிலுக்குச் சேர்த்ததாயும் கூறுகின்றது. இன்னுமிவர் கன்னியாகுமரி வரைக்குஞ் சென்றதற்குச் சான்றாகக் கன்னியா குமரிக்குச் சமீபத்திலுள்ள சுசீந்திரத்தில் ஒரு கல்வெட்டு, கொல்ல மாண்டு 722 (கி. பி. 1546-47)-ல் வெட்டினது, அங்குள்ள விஷ்ணு கோயிலில் இவர் பிறந்த நாளில் அர்ச்சனை செய்வதற்காக ஜயதுங்கநாட்டுப் பூதலவீர இராமவன்மா என்னும் கேரளவரசன் பொருள் வைத்ததைக் கூறுகின்றது. இவர் திருச்சிறுப்பள்ளிச் சீமையை ஆண்டவர். மிஸ்டர் சிவெல் என்பவர் எழுதிய புராதன பட்டிகையால் இவர் மதுரையில் கி. பி. 1547-48-ல் அரசாண்டதாகவும் தெரிகின்றது. விட்டு, விட்டி, விட்டல என்னுங் கன்னடச் சொற்கள் விஷ்ணு என்னும் சமஸ்கிருத பதத்தின் திரிபு. விஷ்ணு என்னும் வடமொழி தமிழிற் போலக் கன்னடத்திலும் விட்டு என்று திரியும்.

விருத்தம்

என்னையவர மறந்தும் யானவரை
மிகநினைந்திங் கிருந்து வாட
முன்னைவினைப் பயன்றானோ வப்பிறப்பிற்
செய்ததவ முடிந்த வாறோ
கன்னன்மத னபிராமன் வரதுங்க
ராமனியற் காசி நாட்டில்
அன்னவயற் குருகினங்கா ளினி யெவ்வா
றுயிர்தரித்திங் காற்று மாறே. (௧௬௫)

செப்பாரு முகிழ்முலையா ரெல்லாருங்
கணவருடன் சேர்ந்து வாழ
ஒப்பாரு மில்லாவென் கணவனுடன்
யான்கூடி யுறவா டாமல்
வெப்பாலு மிகுகாமத் துயராலு
நாடோறு மெலிந்து வாடி
இப்பாடு படவென்றோ விறையவனென்
றலையோட்டி லெழுதி னானே. (௧௬௬)

எண்டிசா முகமுந் திங்க ளிள நிலா வெள்ளங் காயக்
கொண்டமால் பெருகுந்தோறுங் கொழுங்கணீர் முலையிற் கோப்பப்
பண்டுநா மறியாக் காமத் துயரினாற் படுவ தெல்லாம்
வண்டுகா ளுரையீருங்கள் வரதுங்க ராம னுக்கே. (௧௬௭)

கு-பு இப் பாட்டுக்களால், இம் மூன்று பாட்டும் பாடினவள் வரதுங்கராம பாண்டியனுடைய தேவி என்பது தெரிகின்றது. வரதுங்கராம பாண்டியன் பிரமோத்தர காண்டமும் கருவை அந்தாதிகளும் பாடினவன். இவனை அதிவீரராம பாண்டியன் சகோதரன் என்பர். அதிவீரராமன் அரசு செய்யத் தொடங்கியது சாலிவாகன சகம் ௧௪௮௪-ம் (கி. பி. 1562) ஆண்டில்; முடி சூடினது சகம் ௧௪௮௯-ம் ஆண்டில். காசிநாடென்பது திருநெல்வேலியிலுள்ள தென்காசி.

## சத்திமுற்றப் புலவன்

சத்திமுற்றத்திலுள்ள ஒரு புலவன் பாண்டியன் மதுரைக்குப் போகிப், பாண்டியன் வாசற்புலவர் வாசல் விடாமல் மறிக்க, ஊரில் அம்பலத்திற் கிடந்தான் பாடியது:—

ஆகவல்

நாராய் நாராய் செங்கா னாராய்
பழம்படு பனையின் கிழங்கு பிளந்தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கா னாராய்
நீயுநின் பெடையுந்
தென்றிசைக் குமரி யாடி வடதிசைக்
காவிரி யாட வேகுவி ராயின்
சத்தி முற்றத்து வாவியிற் சென்று
நனைசுவர்க் கூரை யரிகுரற் பல்லி
வரவுபார்த் திருக்கு மனைவியைக் கண்டெங்
கோமான் வழுதி கூடன் மன்றத்
தாடை யின்றி வாடையின் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்திக்
காலது கொண்டு மேலுறத் தழீஇ
அலகு திறந்த பல்லினளாகிப்
பேழைசெய் பாம்பென வுயிர்க்கும்
ஏழை யாளனைக் கண்டன மெனுமே.

இதனை ராஜா நகரி சோதனையிற் கேட்டு மறுநாள் வரிசைபண்ணி, வீடும் ஆள் விட்டுக் கட்டுவித்துப் பின் பனுப்பினான். (சகூஅ)

கு-பு. இச் செய்யுளைப் புறநானூற்றில் வரும் 'அன்னச் சேவலன்னச் சேவல்' என்றற் றொடக்கத்து கூஎ-ம் கவியோடு ஒப்பிடுக. இச் செய்யுள் சோழமண்டல சதகத்து 63-ம் பாட்டில் எடுத்துக் குறிப்பிக்கப்பட்டுள்ளது.

## சோழன் புலவன்

பாண்டியன் போரிற் புறந்தந்தோடுவது கண்டு சோழன் புலவன் கூறியது :—

வெண்பா

மான பரணபயன் வந்தா னெனவழுதி
போனவழி யாரேனும் போவரோ — ஆனைப்
படையே யமையாதோ பாவியே னிந்தக்
குடைவே லுடைறழைந்த கோ. (கசுகூ)

கு-ப. பாவியேன் - கெட்டேன் என்பதுபோல இரக்கத்தின்கண் வந்த குறிப்புமொழி. குடைவேல் - நெடிய முட்களையுடைய ஒருவகை வேலமரம்; குடைபோலக் கவிந்திருக்கு மியல்புடையது. இதனை உடைவேல் என்றுஞ் சொல்வர். இதன்முள் உடமுள் எனப்படும்.

வசை பாடிய புலவன், மதுரையிற் பாண்டியன் கண்டு முனியப், பின்னுங் கூறியது:—

வெண்பா

இலங்கிலைவேற் கிள்ளி யெதிர்மலைந்த வந்நாட் -
பொலங்கலனும் பொன்முடியுஞ் சிந்த - நிலங்குழுங்க
ஓடினார் மேலோ வுயர்தரள வெண்குடையாய்
பாடினார் மேலோ பழி. (கஎ0)

கு-பு. 169-ம் செய்யுளும், 170-ம் செய்யுளும் ஒரு புலவன் பாடியன. பாண்டியன் போரிற் புறந்தந்ததைப் பாடிய புலவனைப் பாண்டியன் மதுரையிற் கண்டு கோபிக்க, அவன் அப்போது கூறியது என்க.

கம்பனைக் கொன்றானென்று பழிகூறலின் பாண்டியனிடத்திற் சோழன் விட்ட புலவன் முடிசூட்டு மங்கலநாள் பாடிய வசை :-

வெண்பா

பாண்டியரிற் பாண்டியரிற் பாழான பாண்டியரில்
ஈண்டிவரென விட்ட வெழுத்தல்லை — பூண்டதிருப்
போகவென்றும் வேற்றார் புகுதவென்று நீயிவண்விட்
டேகவென்று மிட்ட வெழுத்து.

இதுகேட்டு நன்றாகவே பொருள் கூறிப் பரிசில் கொடுக்க மறுத்தான். நீ வந்த காரியம் வேண்டிற் சோழன்பாற் போக என்றனன். (கஎக)

கு-பு. புலவன் பாடிய வசைப்பாட்டிற்குப் பாண்டியன் நன்றாகவே பொருள்கண்டு பரிசில் கொடுக்கப் புலவன் மறுத்தான் என்க.

## பாண்டியன் புலவன்

சோழன் புறங்கொடையிற் பாண்டியன் புலவன் கூறியது :—

வெண்பா

ஆறெல்லாஞ் செந்நீ ரருகெல்லாம் பல்பிணங்கள்
தூறெல்லாஞ் சோழன் கரிகுஞ்சி — மாறில்லாக்
கன்னிக்கோ னேவமுடிக் காரிக்கோன் பின்றொடரப்
பொன்னிக்கோன் போன புகார். (கஎஉ)

கு-பு. புகார் - காவிரிப்பூம்பட்டினம். புகார் ஆறெல்லாம் செந்நீர் அருகெல்லாம் பல்பிணம் தூறெல்லாம் சோழன் கரிகுஞ்சி என முடிக்க. கன்னிக்கோன்,- பாண்டியன். காரிக் கோன் - பாண்டியன் படைத்தலைவன் போலும்.

## ஒருதாதி

ஒரு தாதியை ஒரு புலவனுக் களிப்ப, அவள் ஊடலிற் சொல்லியது :—

வெண்பா

முன்னொ ளிருவர் முயங்கும் படிகண்டு
மன்னொ பணிதவிர்த்த வாறறிந்தாய் — துன்னார்தஞ்
சேனைகண் டாவிக்குஞ் செம்பியர்கோன் செங்கண்விழித்
தானைகண் டார்தா மவர். (கஎங)

கு-ப. பணிதவிர்த்து என்றும் பாடம்.

## சோழனும் தேவியும்

சோழனுந் தேவியும் பாடியது :—

விருத்தம்

காடுமீ னம்படக் கண்டநங் கண்டன்வேற்
கோடுமேயுந் துறைக் கொண்டியிக் கோனகர்
தேடுநீ டுங்சொடி தெரியகா முய்யவந்
நாடுமே பாடுமே யன்னமே யின்னமே.

இது தேவி பாடியது. (கஎச)

கு-பு. இந்தப்பாட்டு இரண்டாமடியும் மூன்றுமடியும் மிகப் பிழை பட்டுளது.

விருத்தம்

மலையினுங் கானினும் போயினோர் வருவரே
முலையின்மேற் பாலைபோய் பூதனிறங் கொள்ளுமே
தலையிலங் கியசொடைச் சோமன்வாழ் புவனையில்
தலையிலங் கியதடத் தன்னமே யின்னமே.

இது சோழன் பாடியது. (கஎரு)

கு-பு. புவனை - திரிபுவனம்; கஙO—ஆம் பாட்டுக் குறிப்புப் பார்க்க. இது கும்பகோணத்திலிருந்து திருவிடைமருதூருக்குப் போகுஞ் சாலையில் நான்காவது மைலிலுள்ளது.

வெண்பா

காலெழுந்தேன் வந்தேன் கடுக வழிநடந்தேன்
யான்வந்த தூர மெளிதல்ல — கூனன்
கருந்தேனுக் கங்காந்த காவிரிசூழ் நாடா
இருந்தேனுக் கெங்கே யிடம்.

இதுகேட்டுச் சோழன் மடியில் வைத்தான். (கஎசு)

கு-பு. இது 'சிந்தா சமுத்தி வெண்பா' என்று சில பிரதியிற் காணப்படுகின்றது.

## குரு நமசிவாயர்

குரு நமசிவாயர் பாடியது:—

வெண்பா

அத்தி முகனையும்பி ரானையுமி ரத்தனைக்கும்
சித்த மகிழ்ந்தளிக்குந் தேசிகா — மெத்தப்
பசிக்குதையா பாவியேன் பாழ்வயிற்றைப் பற்றி
எரிக்குதையா காரோண ரே.

காரோணரமுது கொடுத்தார். (கஎஎ)

கு-பு. குகை நமசிவாயருடைய மாணாக்கர் குரு நமசிவாயர் என்பர். இவர் சிதம்பரத்திலே பல திருப்பணிகள் செய்தவர். பரமரகசிய மாலை, சிதம்பர வெண்பா, அண்ணாமலை வெண்பா என்னும் நூல்கள் செய்தவர். இவர் இற்றைக்கு முந்நூற்றைம்பது வருடங்களுக்கு முன்னிருந்தவர். வட ஆர்க்காடு ஜில்லா வேலூர்த் தாலுகாவிலுள்ள விரிஞ்சிபுரம் கோயில் தெற்குவாயிலிலுள்ள சாசனம் ஒன்று சகம் க௫கச, நந்தன வருடத்தில் இவருடைய அடியாராகிய ஆநந்த நமசிவாய பண்டாரத்துக்கு மடங் கட்டுவதற்காக வாண்டவராயன் திருவீதியில் வடசிறகில் புன்னூற்றார் பெரிய எரம்ப நாயக்கர் நிலங் கொடுத்தாராகக் கூறுகின்றது. இதனால் இவர் காலம் அநுமானிக்கலாயிற்று.

காரோணம் என்பது காயாவரோகணம் என்பதன் மரூஉ. காயாவரோகணம் காயத்தில் இறங்குதல் என்று பொருள்படும். இருபத்தெட்டாஞ் சதுர்யுகத்திலே வேதவியாசர் காலத்திலே சுடலையிற் கிடக்கு மொரு பிணத்தினுட் சிவபெருமான் புகுந்து லகுலி என்னும் பிரமசாரியாய்த் தோன்றுவரெனவும், அவர் அவ்வாறு தோன்றுமிடம் காயாவரோகம் அல்லது காயாவரோகணமென்று பெயர்பெறுமெனவும் வடமொழி இலிங்கபுராணம் (உச - ம் அத்தியாயம்) கூறுமென ஸ்ரீராமகிருஷ்ண கோபால பண்டாரகர் கூறுவர். பிரம விஷ்ணுக்கள் ஒருங்கே இறக்கவரும் காலத்தில் சிவபெருமான் அவர்களை ஒடுக்கி அவர்களுடைய காயத்தைத் தம்மீதேற்றிக்கொடலால் காயாரோகணரெனப் பெயர் பெறுவரென்று காஞ்சிப்புராணம் கூறும்.

இலாடதேசத்திலே காரோகணம் என்றோர் ஊருளது. அங்கே சிவன் ஸ்ரீலகுலீசபட்டாரகராக அவதரித்தார் என்று சிலாசாஸனம் கூறும். தென்னாட்டில் காஞ்சியிலும் திருக்குடந்தையிலும் நாகையிலுமுள்ள சிவாலயம் சிவ காரோணமெனப்படும்.

## ஏகம்பவாணன்

வாணன் தாதிமேற் கோபமாய் விலங்கு கொண்டுவாவென்றபோது வாணன் சேடியர் பாடியது :—

வெண்பா

அலங்க லணிமார்ப னறையர்கோன் வாணன்
விலங்கு கொடுவருக வென்றான் — இலங்கிழையீர்
சேரற்கோ சோழற்கோ தென்பாண்டி நாடாளும்
வீரற்கோ யார்க்கோ விலங்கு. (கஎஅ)

கு-பு. வாணனென்றது ஏகம்பவாணனை. இவன் மகத நாடெனப்படும் தஞ்சைநாட்டிலுள்ள ஆற்றூருக் குரியவன். இது "தெருளைப்புரவி" என்றதற் றொடக்கத்துப் பாணாற்றுப்படைச் செய்யுளிலே, "மகதேசனுறை நகர் காவலன் வாணபூபதி" என்று வருவதனால் விளங்கும். அடுத்த பாட்டில் இவன் காலத்திருந்த பாண்டியன் சீவலமாறன் என்பதனால், இவன் ஸ்ரீவல்லபதேவன்

என்னும் அதிவீரராம பாண்டியன் காலத்தவனாதல் வேண்டும். அதிவீரராம பாண்டியன் சகம் கசுஅசு, ரக்தாக்ஷி வருஷம் முடி சூடினான். அதாவது கி. பி. 1564: இற்றைக்கு 356 வருஷங்களுக்குமுன். அக்காலத்தில் சேர சோழ பாண்டியர்கள் வலிகுன்றி விஜயநகரத் தரசரின்கீழ்ச் சிற்றரசராய் வாழ்ந்தனர். ஏகம்ப வாணன் சேர சோழ பாண்டியர்மேல் அதிகாரஞ் செலுத்திய தாகத் தெரிதலால், இவன் விஜயநகரத்தரசர்களது சேனபதியாக, அல்லது பிரதிநிதியாக இருந்திருத்தல்வேண்டும். இவனைப் பற்றிய மற்றைய விஷயங்களுக்குச் செந்தமிழ் ஆறாந் தொகுதி பார்க்க. ஏகம்பன் என்பது இயற்பெயர்; வாணன் என்பது குடிப் பெயர். இவனைக் கம்பர்காலத்தவ னென்பது கட்டுக்கதை.

நாலு தாதியரைப் பாண்டியன் மாலை வாங்கிக் கொடுவர அனுப்ப, அவர் பாடியது:—

வெண்பா

தென்னவா மீனவா சீவலமா றாமதுரை
மன்னவா பாண்டி வரராமா — முன்னாள்
சுரும்புக்குத் தாரளித்த தூயதமிழ் நாடா
கரும்புக்கு வேம்பிலே கண். (கஎகூ)

கு-பு. சீவலன் - ஸ்ரீவல்லபன். வரராமன் - அதிவீரராமன்.

மாப்பைந்தார்க் கல்லமுத்து வண்ணத்தார்க் கல்லவஞ்சி
வேப்பந்தார்க் காசைகொண்டு விட்டாளோ - பூப்பைந்தார்
சேர்ந்திருக்கு நெல்வேலிச் சீவலமா றாதமிழை
ஆய்ந்துரைக்கும் வீரமா றா. (கஅ0)

வேம்பா கினுமினிய சொல்லிக்கு நீமிலைந்த
வேம்பா கினுமுதவ வேண்டாவோ — தேம்பாயும்
வேலையிலே வேலைவைத்த மீனவா நின்புயத்து
மாலையிலே மாலைவைத்தாண் மான். (கஅக)

கு-பு. வேம்பு பாகினுமினிய சொல். பாண்டியன் கடல்சுவற வேல்விட்ட கதையைத் திருவிளையாடல் புராணத்துக் காண்க.

இந்த மூன்று கவிக்கும் மாலை கொடாமையைப், பின் ஒருத்தி பாடியது :—

வெண்பா

இலகுபுகழ் நாறு மெய்கம்ப வாணன்
அலகைவருந் தாருமென் தந்தி — உலகறிய
வானவர்கோன் செங்கரியின்மேல் வண்ணவளை யெறிந்த
மீனவர்கோன் கைவிடான் வேம்பு.

இதைக் கேட்டு மாலை கொடுத்தான். (௧௮௨)

கு-பு. பேய்க்கு வேம்பு மருந்தாக எண்ணப்படுதலால் வாணனது பேய்க்குப் பயந்து வேப்ப மாலையைக் கைவிடான் என்று சாதுரியமாகச் சொல்லப்பட்டது.

வாணனுடைய பாணன் மதுரையிற் போனபோது பாண்டியன் தியாகம் கொடுக்க, பாணன் வலக்கையாலல்லாமல் இடக்கையால் ஏற்கப், பாண்டியன் உழவனென் றிகழ்ந்தபோது பாடியது :—

வெண்பா

சேனை தழையாக்கிச் செங்குருதி நீர்தேக்கி
ஆனை மிதித்த அருஞ்சேற்றில் — மானபரன்
மாவேந்தன் வன்கண்ணன் வாணன் பறித்துநடும்
மூவேந்தர் தங்கள் முடி. (௧௮௩)

கு-பு. இதனால் இப்பாட்டு ஏகம்பவாணன் மனைவி பாடினதென்ற பிற்காலத்து வழக்குக் கொள்ளப்படாமை அறிக.

## முனையதரையன்

திருக்கண்ணபுரத்துத் தாசி முனையதரையனுக்கு எழுதி விடுத்த பாட்டு :—

வெண்பா

இன்றுவரி லென்னுயிரை நீபெறுவை யிற்றைக்கு
நின்று வரிசைதரு நீயறிவை — வென்றி
முனையா கலகி முயங்கியவா றெல்லாம்
நினையாயோ நெஞ்சத்து நீ. (௧௮௪)

கு-பு. முனையதரையர் என்பவர் விக்கிரம சோழனுடைய மந்திரிகளி லொருவர் என்று தெரிகின்றது : அதனை,

ஆர்க்குங் கழற்கா லனகன் றனதவையுட்
பார்க்குமதி மந்திர பாலகரிற் — போர்க்குத்
தொடுக்குங் கமழ்தும்பை யாகிநெடுங் கூடிக்
கொடுத்த புகழ் முனையர் கோனும். (70 71)

எனவரும் விக்கிரம சோழனுலாவினடிகளா லறிக. விக்கிரம சோழன் காலம் 1118-1136. இவர் சரித்திரத்தைச் செந்தமிழ் ஏழாந் தொகுதி, ௧௧௦ - ௧௧௪ - ம் பக்கத்தில் காண்க. திருக் கண்ணபுரம் தஞ்சாவூர் ஜில்லா நன்னிலம் தாலுகாவிலுள்ளது.

## திருவழுந்தூர்த் தாதி

திருவழுந்தூர்த் தாதியைச் சோழன் எந்தவூர் என்று கேட்டபோது பாடியது :—

வெண்பா

கம்பன் பிறந்தவூர் காவேரி தங்குமூர்
கும்பமுனி சாபங் குலைந்தவூர் — செம்பதுமத்
தாதகத்து நான்முகனுந் தாதையுந் தேடிக்காணா
வேதவித்து வாழு மழுந்தூர். (௧௮௫)

கு-பு. கும்பமுனி - அகத்தியர். இவருக்கு நேரிட்ட சாப மாவது நரமாமிச பக்ஷணம் செய்யென்று காவேரியாற் கொடுக் கப்பட்ட சாபமென்பர். திருவழுந்தூர் தஞ்சாவூர் ஜில்லா மாய வரந் தாலுகாவில் குற்றாலத்துக்குத் தெற்கே இரண்டு மைல் தூரத்திலுள்ளது.

## ஒரு புலவன்

பரிசில் பெற்றுக் கிராமப் பிரதட்சிணம் வரும் புலவன் உப்பரிகைமேற் பார்த்த ஒருத்தியைக் கண்டு விரகமாய்ப் பாடியது :—

வெண்பா

என்னெஞ்சு மென்விழியுங் கொண்டோ விலைக்கேசன்
பொன்னும் பெருமணியும் பொன்முடியும் — என்னெஞ்சந்
சிக்குங் கொடைசிவந்தான் செங்கோடை யார்கழுக்கும்
பற்றுஞ் சாவித்ரீ பல.

கண்டு பனியக் கடவேனோ காதலுடன்
தொண்டை யிதழ்நுகர்ந்து தோய்வேனோ - கொண்டற்
கொடைச்சிவந்தான் கோடைக் குளிர்காவி லன்ன
நடைச்சிவந்தா ளென்செய்வே னான்.

இந்தக் கவியை ஒற்றறைய மழவராயன் கேட்டிருந்து வரைந்துகொண்டு அவனுக் கொடுத்தான். (க௭)

கு-பு. இப்புலவர் யாரென்பதும் இக்கவிக்கு உகந்த தென்பதும் தெரியவில்லை. கோடை என்பது சிவந்தான் என்பவனுடைய ஊர். கோடை புறநானூற்றில் ஒருவேட்டுவன் மலை என்று கூறப்பட்டுளது.

## உத்தரநல்லூர் நங்கை

உத்தரநல்லூர் நங்கை பிராமணரைப் பாடியவை:—

விருத்தம்

சந்தன மரமும் வேம்புந் தனித்தனி கந்த நாறும்
அந்தணர் தீயில் வீழ்ந்தா லதுமண நாறக் காணேன்
செந்தலைப் புலைய னார்க்குத் தீமண மதுவே நாறும்
பந்தமுந் தியும் வேறோ பாய்ச்சலூர்க் கிராமத் தாரே.

கு-பு. இப்பாட்டுப் 'பாய்ச்சலூர்ப் பதிகம்' என்னும் சிறு நூலில் வருவது; ஒன்பதாம் பாட்டு. தீயிலிட்டால் சந்தனமும் வேம்பும் வெவ்வேறு மணம் நாறுவதுபோல, அந்தணரும் புலையரும் தீயில் வீழ்ந்தால் வெவ்வேறு மணம் நாறுவதில்லை; ஆதலால் ஜாதிவேற்றுமையில்லை என்பது இதன் கருத்து. பந்தம் - விளக்கு, தீவட்டி. சில பிரதிகளில் இன்னும் இரண்டு பாட்டுக்கள் காணப்படுகின்றன. அவை வருமாறு:—

குலங்குல மென்ப தெல்லாங் குடுமியும் பூணு நூலும்
சிலந்தியு நூலும் போலச் சிறப்புடன் பிறப்ப துண்டோ
நலந்தரு நான்கு வேத நான்முகன் படைத்த துண்டோ
பலந்தரு பொருளு முண்டோ பாய்ச்சலூர்க் கிராமத் தாரே.

ஊருள பார்ப்பார் கூடி யுயர்ந்தன சாலை கட்டி
நீரிலே மூழ்கி வந்து நெருப்பிலே நெய்யை விட்டுக்
கார்வயற் றவளை போலக் கதறிய வேத மெல்லாம்
பாரைவிட் டகன்ற தோதான் பாய்ச்சலூர்க் கிராமத் தாரே.

இவ் விரண்டில் முதல் பாட்டுப் பாய்ச்சலூர்ப்பதிகத்தில் இல்லை. பாய்ச்சலூர் திருச்சிறுப்பள்ளிக்கு நேரே கொள்ளிடத்தின் வடக்கிலுள்ளது.

## திருவாரூர் நாகரசநம்பி

திருவாரூர் நாகரச நம்பி செய்த குற்றங் கிள்ளைக்குச் சொல்லுவித்துத் தலத்தார் இராயருக்குச் சொல்லி அறிவித்தது :—

வெண்பா

மூன்று ளறுபத்து மூவரிருந் தாரவரில்
இந்நா லிரண்டுபே ரேகினார் — கன்றான்
நருக்கின்றான் விற்றுவிட்ட நாகரச நம்பி
இருக்கின்றான் கிட்டணரா யா.

கு-பு. நாகராசநம்பி என்பவர் திருவாரூர்க் கோயில் அருச்சகர்போலும். இதனால் தெரிவது யாதெனில், திருவாரூர்க்

கோயிலிலிருந்த அறுபத்துமூவர் விக்கிரகங்களுள் இரண்டை நாகராசநம்பி எடுத்து விற்றுவிட்டான் என்பதும் அவற்றைக் கண்ணன் ஒருவன் கருக்கி உருக்கினன் என்பதும். இந்தப் பாட்டை அந்தத்தலத்தார் கிளி ஒன்றுக்குச் சொல்லிப் பயிற்றி அதனைக் கொண்டு கிருஷ்ண தேவராயருக்கு அறிவித்தார். கிருஷ்ண தேவராயர் காலம் 1509 - 1529.

## புங்கனூர்க் கிழவன்

புங்கனூர்க் கிழவனைக் கல்யாணத் தொருவன் பாடியது :—

கட்டளைக் கலித்துறை

வெண்ணெயும் பார்த்தன்னை கண்ணையும்
பார்த்துத்தன் மெய்பிற்பட்ட
புண்ணையும் பார்க்க திருநெடு
மால்புங்க னூர்க்கிழவன்
பண்ணையுஞ் சேனுக னூந்தட
நீள்கயல் பாயுநெடுந்
திண்ணையுங் கெண்டை புரட்டுங்கல்
யாணத்திற் சென்றவர்க்கே

இதுகேட்டுப் புங்கனூர்க் கிழவன் பிராணத்தியாகம் பண்ணினன். (௧௩௦)

கு-பு. கெண்டை புரட்டும் என்பது மீனுக்கும் கணைக்காலுக்கும் சிலேடை. விஷபேதிகண்டு இறக்குந் தருணத்தில் கணைக்காலில் தோன்றும் வலிக்குக் கெண்டை புரட்டுதல் என்பர். இதனால் புங்கனூர்க் கலியாணத்தில் விருந்துண்டவர் பலர் விஷபேதி கண்டு இறந்தார் என்று புலப்படுகின்றது. கெண்டைக் கால் - கணைக்கால்.

இப்பாட்டைக் கேட்டுப் புங்கனூர்க்கிழவன் பிராணத் தியாகம் செய்ததைச் சோழமண்டல சதகமுடையாரும் கூறுவர்.

அறங்கூர் பெரியோர் மாசுவரிலாற்று
நஃபேயமைக வினிக்
கறங்கூர் கெண்டை புரட்டுமெனக்
கலியாணத்திற் கவிகேட்டுப்
புறங்கூர் பவளக்கடன் முழுகும்
பொன்னங்கலத்திற் புடைசொரிந்த
மறங்கூர் புங்கனூர்க்கிழவன் வளஞ்சேர்
சோழ மண்டலமே (67)

புங்கனூர் தஞ்சாவூர் ஜில்லா சீர்காழித் தாலுகாவி லுள்ளது.

## குடிதாங்கி

கட்டளைக் கலித்துறை

வெறும்புற் கையுமரி தாய்க்கிள்ளை
சோரவென் வீடுகெட்டேன்
எறும்புக்கொ ராற்பத மில்லைகண்
டாயென் னிருங்கலியின்
குறும்பைத் துரத்துங் குடிதாங்
கியைச்சென்று கூடியபின்
தெறும்புற்கொள் யானை கவளங்கொள்
ளாமைத் தெவிட்டியதே. (கககூ)

**இது பாதிகேட்டுப் பரிசில் கொடுத்தபின் பாதி பாடியது.**

கு-பு. உலகி விலையென் றுரையாமே
யுதவல் குணத்தோர்க் குளதாமே
இலகு மெறும்புக் காற்பதம்வே
றில்லையென யாவது மீந்தான்
புலவன் மகிழ்ந்து பிற்பாதி
புகலக் கேட்ட புகழாளன்
மலைகொள் புயத்துக் குடிதாங்கி
வளஞ்சேர் சோழ மண்டலமே. (82)

என்னும் சோழமண்டல சதகச் செய்யுளால், இது குடிதாங்கி யைப் பாடினதாகத் தெரிகின்றது

## கச்சிராயன்

கச்சிராயன் கண்டிய தேவனைப் பாடிய கவி: —

சிந்தியல் வெண்பா

குப்பாய மிட்டுக் குறுக்கே கவசமிட்டுக்
கைப்பாச மிட்டுவருங் கண்டியதே வாவுனது
தொப்பாரத் தின்சிழ் மயிர். (கஎஉ)

கு-பு. குப்பாயம் - சட்டை. தொப்பாரம் - வீரர்கள் தலையி லணியும் ஒருவகை முடி: (helmet). கைப்பாசம் என்பது கைக் கவசம் போலும்.

## கண்டியதேவன்

இதுகேட்டுக் கண்டிய தேவன் விருதெறிந்து போட்டுக் கச்சிராயர் சரக்கறை தியாகங் கொடுக்கப் பலிதூக்க வந்த நீலகங்கனைக் கண்டியதேவன் பாடியது.

கட்டளைக் கலிப்பா

அலைவ ளைத்த திருப்பாற் கடலிலே
யாட ராவி னணையிலே பச்சையால்
இலைவ ளைத்த பணிமண் டபமிலே
யிங்கு நீவந்த வாறே தியம்புவாய்
கொலைவ ளைத்த விலங்கேசன் மாமலர்க்
கொத்து மாமுடி பத்துக்கு மன்றொரு
சிலைவ ளைத்த கரநீல கங்கனே
திங்கள் வெண்குடைச் சிற்றம் பலவனே

இதுகேட்டு அவன் குதிரை கொடுவந்தே னென்று குதிரை கொடுத்தான். (கஎ௩)

கு-பு. 'கச்சிராயர் சரக்கறைத் தியாகங்கொடுக்கப் பராலிக்க வந்த' என்றும் 'பலிதூக்கவந்த' என்றும் பாடபேதம்.

## விண்ணன்

விண்ணன் அரவின்மணி கொடுத்தபோது ஒரு புல- வன் பாடியது :—

வெண்பா

கூர்ந்த வறுமையிடைக் கோளரவ மீன்றமணி
சார்ந்த புலவன் றனக்களித்தான் — வார்ந்ததரு
மேலைவிண்ணின் மண்ணில் விளங்கும் புகழ்படைத்த
சாலைவிண்ண னுக்கிணையார் தாம். (கசுச)

## வாயற்பதிவடுகன்

பிணத்தை மூடி அன்னமிட்டபோது ஒருபுலவன பாடியது :—

கட்டளைக் கலித்துறை

தன்னுடன் கூடப் பிறந்துபி
ராகிய தம்பியையும்
அந்நிலை மாண்டது தோன்றுமன்
மூடிவைத் தன்னமிட்டான்
மன்னவர் போற்றிய வாழ்செங்க
லங்கை வடுகனுக்குக்
கன்னனுஞ் சோமனு மோரிக
ராயினிக் காண்பதுவே. (கசுரு)

கு-பு. தனது தம்பியின் பிணத்தை மூடிவைத்து வந்த புலவனுக் கன்னமிட்டவன் வாயற்பதியில் வடுகன். இதனைப் பின் வருந் தொண்டை மண்டல சதகச் செய்யுளாலறிக :—

நேயத் துடன்பிறந் தோன்பிண மூடி நெருப்பவித்துத்
தாயொப் பெனவெதிர் கொண்டழைத் தேதன் னுடனெனவே
ஆயத் தமிழ்கொண் டருங்கவி ராயனுக் கன்புசெய்த
வாயற் பதியில் வடுகனும் வாழ்தொண்டை மண்டலமே. (58)

## கச்சியப்பன்

கச்சியப்பனை உதைத்த புலவன் பாடியது:—

வெண்பா

மண்படுமோ வெப்பிலிலே வாடுமோ புல்லரிநு
கண்படுமோ வெப்போதுங் சுற்றவர்க்குப் — பண்புடனே
மெச்சியப்பா லுங்கொடுக்கும வீறுவல்லைக் காளத்திக்
கச்சியப்ப னையுதைத்த கால். (கசுஎ)

கு·பு. இங்கே குறித்த கசசியப்பன் வல்லைமா நகர்க் காளத்தி முதலியார் மகன் கசசியப்பன். இக்கதை தொண்டை மண்டல சதகத்திலுங் கூறப்பட்டுளது:—

வில்லைச செருப்பிட்ட காலா
லுதைத்து வியனுலகிற்
சொல்லற் கரிய புகழ்கொடுத்
தோன்றுட்ட வீரன்றன்றற்
பல்லக்கி லேயன்றி மண்படு
மோவென்னும் பாடல்கொண்ட
வல்லைப் பதிக்கசசி யப்பனும்
வாழ்தொண்டை மண்டலமே. (50)

## ஒரு புலவன்

வெண்பா

அடும்போதுஞ் சொல்லில்லை யென்று மடுஞ்சோ
றிடும்போதுஞ் சொல்லில்லை யென்னுங் — குடும்பமெனும்
பேய்க்கொளித்துப் போகின்றென் பேரையூ ராதிபனே
தாய்க்கொளித்த சூலுண்டோ தான்.

வண்டியூர்க் கெழுந்தருளப் பண்ணுகிற மண்டபத்திற் சொல்லியது. (கசுஎ)

இதுகேட்டு வேம்பத்தூர்ப் பிராமணப் பிள்ளைகள் பாடியது :—

வெண்பா

ஒன்று மறியோநா மும்மாணை யப்பரே
சென்று தொழில்புரியுஞ் சீபதியார் — கன்றக்
கயிற்றினாற் கட்டிக் கதவுபடத் தெற்றி
இயற்றினு லென்செய்வோம் யாம். (௧௯௮)

கு-பு. இப் பாட்டுக்களைப் பற்றிய கதையாதுந் தெரிய வில்லை.

அம்மைச்சி

அம்மைச்சி பிராமணர் தன் வீட்டைப் பிடுங்கிய போது பாடியது :—

வெண்பா

பெருமா டிருநாளைப் பேயாக்க வென்றே
வருமாண்டு தோறுமிந்த மாண்ப — ரொருநாளு
மாக்குதிரை யேறறியா மாசனங்க ளாமணக்கஞ்
சாய்க்குதிரை யேறினார் தாம். (௧௯௯)

பாப்புக் குரங்கைப் படையாகக் கூட்டிவந்தீர்
தேப்பெருமா ளேகச்சிச் செல்வரே — கோப்பமைந்த
கொம்மைச் சிகரலங்கைக்கோட்டையென்று கொண்டீரோ
அம்மைச்சி வாழ்வா ரகம். (௨௦௦)

கு-பு. அம்மைச்சி என்பவள் காஞ்சிபுரத்திலிருந்த ஒருதாசி. அவளுடைய வீடு வரதராஜப்பெருமாள் தேரோடும் வீதியிலிருந்த தென்றும் ஒரு முறை அந்தத்தேர் வழியினின்று சாய்ந்து அம்மைச்சி வீட்டுப்புறம் சென்றதென்றும் அதனைத் திருப்பி வழிக்குக் கொண்டுவருதற்கு அம்மைச்சிவீட்டை இடிக்க நேர்ந்ததென்றும் கூறுவர். இதனை இக்கவிகள் குறிக்கின்றன.

## காளமேகப் புலவர்

காளமேகம் சீரங்கத்தில் பிள்ளையார் வருவானேன் என்றதற்குப் பாடியது:—

வெண்பா

தந்தை பிறந்திறவாத் தன்மையாற் றன்மாம
னந்தம் பிறந்திறக்கு மாதலால் — முந்துமளி
நாணிக்கு வில்வேளு மாய்தலால் நன்மாமன்
காணிக்கு வந்திருந்தான் காண். (உ0௧)

கு-பு. காளமேகப் புலவரைப்பற்றிய கதை யாவரும் நன்கறிந்தது. அவர் காலமிதுவென்பதுதான் தெரியாதிருந்தது. அதுவும் இப்போது திருவானைக்காக் கோயிற் றென்சுவரிலுள்ள கல்வெட்டால் ஐயந்திரிபறத் தெரிந்துவிட்டது. இக்கல்வெட்டுச் சகவருடம் ௧௩௭௫-க்குச் சரியான ஸ்ரீமுக வருடத்தில் கோபராஜன் குமாரனை சாளுவத் திருமலைராயன் ஜம்புகேசுரருக்கு ஒரு திருவாபரணமளித்ததாகக் கூறுகின்றது. இந்தத் திருமலைராயன் விஜயநகரத்தரசரின் (மல்லிகார்ச்சுனராயர் 1449-1465; விரூபாக்ஷராயர் 1466-1485) பிரதிநிதியாகத் தென்னாட்டை கி. பி. 1453 முதல் கி. பி. 1468 வரை ஆண்டவன். இவ்வரசனுடைய காலத்தில் காளமேகப்புலவர் இருந்தது முன்னர் வரும் உ0௬-ம். பாட்டால் நன்கு விளங்கும். ஆகவே காளமேகப் புலவர் காலம் இற்றைக்கு ஏறக்குறைய 450 வருடத்துக்கு முற்பட்டது. காளமேகப் புலவரின் இயற்பெயர் வரதன் என்பது. இவரூர் கும்பகோணத்துக்கருகிலுள்ள நாதன் கோயில் எனப்படும் நந்திபுரம். முன்னர் வரும் உ௧௧-ம் பாட்டும் உஉஉ-ம் பாட்டும் பார்க்க. வேறு கூறுவதுமுண்டு.

மாம்-மாமன். அனந்தம் பிறந்திறக்கும் - முடிவின்றிப் பிறந்திறப்பான். முந்தும் - முன்னரும். அளிநாணும் இக்குவில்லுமுடைய வேள் - மன்மதன். காணி - உரிமை.

பாகவதரிட்ட சமுத்திக்குப் பாடியது:—

கட்டளைக் கலித்துறை

தடக்கட லிற்பள்ளி கொள்ளுவம்
யாமதைச் சங்கரனார்
அடற்புலிக் குட்டிக் களித்தன
ராலது கேட்டுநெஞ்சம்
நடுக்கம துற்றது கைகா
லெழாநளி னத்தியென்னை
இடுக்கடி பாயைச் சுருட்டடி
யேறடி யம்பலத்தே. (உ0உ)

கு-பு. "இடுக்கடி பாயைச சுருட்டடி ஏறடி யம்பலத்தே" என்பது பாகவதரிட்ட சமுத்தி. புலிக்குட்டி வியாக்கிரபாத முனிவரின் புதல்வரான உபமன்யு. இவருக்குச் சிவபெருமான் பாற்கடல் கொடுத்ததைப் "பாலுக்குப் பாலகன்வேண்டி யழுதிடப் பாற்கடலீந்த பிரான்" என்னுந் திருப்பல்லாண்டா லறிக. இக்கதை இலிங்க புராணத்திற் கூறப்பட்டுளது. நளினத்தி-தாமரை யாசனியாகிய இலக்குமி.

சைவர்க்குந் தாதர்க்குஞ் சண்டையானபோது பாடியது:—

வெண்பா

சீரங்கத் தார்க்குந் திருவானைக் காவார்க்கும்
போரங்க மாகப் பொருவதேன் — ஓரங்கள்
வேண்டாமி தெல்லாம் விகற்பந் தெரியாதோ
ஆண்டாருந் தாசருமா னால். (உ0ந)

கு-பு. சைவப்பரதேசிகள் ஆண்டிகளென்றும் வைஷ்ணவப் பரதேசிகள் தாதரென்றும் கூறப்படுவர். ஓரம் - பக்ஷபாதம்.

ஞானவரோதயர் மதுரைக்குப் போனபோது எழுதி அனுப்பின கவிதை:—

கட்டளைக் கலித்துறை

முதிரத் தமிழ்தெரி கின்பாட றன்னை முறையறிந்தே
எதிரொக்கக் கோப்பதற் கேழெழு பேரில்லை யின்றமிழின்
பதரைத் தெரிந்தெறி கோவில்லை யேறப் பலகையில்லை
மதுரைக்கு நீசென்ற தெவ்வாறு ஞான வரோதயனே. ()

கு-பு. ஞானவரோதயர் என்பர் ஒருபுலவர். இவரைப்பற்றி வேறு ஒன்றுந்தெரியவில்லை. எழெழுபேர் - சஙகப்புலவர் நாற்பத்தொன்பதுபேர். இன்தமிழின் பதரைத் தெரிந்தெறிகோ - பிள்ளைப்பாண்டியன். பலகை - சங்கப்பலகை.

திருமலைராயன் சபையிற் கங்கை குடத்திலே அடங்கப் பாடுமென்று சொன்னபோது பாடியது:—

வெண்பா

விண்ணுக் கடங்காமல் வெற்புக் கடங்காமல்
மண்ணுக் கடங்காமல் வந்தாலும் — பெண்ணை
இடத்திலே வைத்த விறைவர் சடாம
குடத்திலே கங்கையடங் கும். (உ0டு)

திருமலை ராயனைப் பாடியது:—

விருத்தம்

இந்திரன் கலையா யென்மருங் கிருந்தா
னக்கினி யுதரம்விட் டகலா
னெமனெனைக் கருதா னரனெனக்கருதி
நிருதிவந் தென்னையென் செய்வான்
அந்தமாம் வருண னிருகண்விட் டகலா
னகத்துமக் களுக்குமப் படியே
யநிலமா மரியே யமுதமாய் வருவ
னொரனை யுலகினி லொப்பார்

சந்தத மிந்த வரிசையே பெற்றுத்
தரித்திர ராசனை வணங்கித்
தலைசெயு மென்னை நிலைசெய்கல் யாணிச்
சாளுவத் திருமலை ராயன்
மந்தரப் புயனுங் கோப்பைய னுதவு
மகிபதி விதரண ராமன்
வாக்கினுற் குபேர னுக்கிணை யிவனே
மாசிலீ சானனு னவனே. (உ0௬)

கு-பு. இந்திரன் கலையாய் என்மருங் கிருந்தான் என்பது இந்திரனுக் காயிரங்கண் ணுதலின், நான் கட்டியிருக்கும் வஸ்திரம் ஆயிரம் பீறலென்றதாம். அக்கினி உதரம்விட் டகலான் என்பது வயிற்றில் பசி நீங்காது என்றதாம. வருணன் இருகண் விட்டகலான் என்பது கண் எப்போதும் அழுது நீரோடினபடியே யிருக்குமென்றதாம். அநிலமாம அரியே அமுதமாய் வருவன் என்பது வயிற்றுக் காகாரம் வாயுவே என்றதாம்.

இப் பாட்டில் இந்திரன் முதலிய அட்டதிக்குப் பாலகர் பெயரும் வரிசையாக வந்தது காண்க.

கோபராஜன் குமாரனுன சாளுவத்திருமலைராயன். மேலே 201-ம் பாட்டின் கீழுள்ள குறிப்புப் பார்க்க.

அதிமதுர கவிராசன் பின்னே காணவரப் பாடியது :—

வெண்பா

கோக்குதிரை நின்குதிரை கோவல்மதுரா வொன்னர்
மாக்குதிரை யெல்லா மனைக்குதிரை — தூக்குதிரைத்
துங்கக் கரைக்குதிரை சொக்கன் குதிரைசது
ரங்கக் குதிரைகளே யாம். (உ0௭)

கு-பு. 'கோவல்மதுரா' என்றதனல், அதிமதுர கவியினூர் திருக்கோவலூர் போலும். கரைக்குதிரை - ஆற்றங்கரை கட்டுவதற்கிடும் குதிரை. சொக்கன்குதிரை - நரி ; பொய்க்குதிரை என்றுமாம்.

ஆரூரில் அதிமதுர கவிராசன் உடன்வந்து கோவி லிலே ஒரு கவி பாடுகெனக் காளமேகம் பாடியது:—

வெண்பா

சேலை யுடையழகா தேவரகண் டாகழுநீர்
மாலை யழகா மணிமார்பா — வேலை
அடங்கார் புரமெரித்த வாரூரா வீதி
விடங்கா பிறியா விடை. (உ0அ)

கு-பு. தேவரகண்டன் என்பது தியாகராசப்பெருமாள் திரு நாமங்களுளொன்று. திருவாரூருலா 28-ம் கண்ணி பார்க்க.

அதிமதுர கவிராசன் பாடியது :—

வெண்பா

நாணென்றால் நஞ்சிருக்கு நற்சாபங் கற்சாபம்
பாணந்தான் மண்டின்ற பாணமே — தானுவே
சீராரூர் வாழுஞ் சிவனேயஃ தெப்படிநீர்
நேராரூர் செற்ற நினைவு. (உ0௯)

கு-பு. நஞ்சிருக்கும் நாண் - நஞ்சுடைய வாசுகி (கெட்டிருக்-கும்நாண்). கற்சாபம்- மேருமலை (கற்போல வளையாவில்.) மண் தின்றபாணம் - திருமால் (மண் அரித்தபாணம்). பாணந்தான் மண் டின்ற பாணமே என்ற அடி காளமேகப் புலவராற் பாடப் பட்டது. முன்னர் வரும் உஉக - ம் பாட்டுப் பார்க்க.

மாவலிவாணனைப் பாடிய வசை :—

வெண்பா

சொக்கன் மதுரையிற் றொண்டற்கு முன்னவிழ்த்த
பொய்க்குதிரை சண்டைக்குப் போமதோ — மிக்க
கரசரணு வந்தக் கரும்புறத்தார்க் கெல்லாம்
அரசான மாவலிவா ணு. (உக0)

தெண்டிக்கு வரதன் விடுத்த சீட்டுக்கவி :-

வெண்பா

நள்ளாற்றுத் தெண்டிக்கு நல்வரதன் தீட்டுமயல்
விள்ளாம லெத்தனைநாள் வெம்புவேன் — கள்ள
மதனப் பயலொருவன் வந்துபொருஞ் சண்டைக்
குதவக் கடுகிவர வும். (உகக)

கு-பு. நள்ளாறு - திருநள்ளாறு. காரைக்காற் சீமையிலுள்ளது. தெண்டி - ஒரு தாசி. தீட்டுக்கவி - சீட்டுக்கவி. சீட்டு - எழுத்து. தீட்டு என்பது இக்காலத்துச் சீட்டு என மருவிற்று. வரதன - காளமேகத்தின் இயற்பெயர்.

தெண்டி நள்ளாற்றினின்று திருக்குடந்தைக்கு வந்த போது பாடியது :—

வெண்பா

தேற லமிர்தந் தெவிட்டிடினுஞ் செங்கனிவாய்
ஊற லமிர்த முவட்டாதே — வீறுமதன்
தன்னுனை நள்ளாறர் தம்மானை யும்மானை
என்னுனை தெண்டியா ரே. (உகஉ)

கு-பு. தண்டியாரே என்றும் பாடம். குடந்தை - கும்பகோணம்.

வேளான் வீட்டிலிருந்து இல்லையென்று சொன்னபோது பாடியது :—

வெண்பா

பாலலகை யன்று பரிந்தளித்த கோத்திரத்துக்
காலமென வந்த வடைக்கலவன் — சூலந்
திருக்கையிலே யேந்துஞ் சிவனறிய வேளான்
இருக்கையிலே சாகுடியா னன். (உகங)

கு - பு. அலகை என்றது காரைக்காலம்மையைப் போலும். சாகுடி - செத்தகுடி.

நாகபட்டணத்துச் செட்டி அடைப்புவீதம் பாடச் சொன்னபோது பாடினதி லொருபாட்டு:—

வெண்பா

முற்றாத காஞ்சியினு முல்லையினும் பாலையினுங்
கற்றான்பின் சென்ற கருணைமால் — பெற்றான்சேர்
ஆலைப் பதித்தா ரளகத்தி யார்க்கயனார்
வேலைப் பதித்தார் விழி. (உகச)

கு-பு. அடைப்புவீதம் யாதென்பது விளங்கவில்லை. காஞ்சியில் கற்றான்பின் சென்றது - கணிகண்ணருக்குப்பின் போனது. முல்லையில் கற்றான்பின் சென்றது - முல்லை நிலத்தில் கன்றையுடைய பசுவின்பின் சென்றது - கிருஷ்ணன். பாலையில் கற்றான்பின் சென்றது - காட்டில் விசுவாமித்திரர்பின் சென்றது இராமன். பெற்றான் - வணிகன்பேர். ஆலைப்பதி - அவனூர்.

சவையப்ப நாயனைப் பாடிய கவி:—

வெண்பா

சொருக்கவிழ்ந்த முன்குடுமிச் சோழியா சோற்றுப்
பொருக்கெழுந்த வாயா புலையா — திருக்குடந்தை
நாயா நரியாவுன் றைம்முகமுஞ் சேய்வடிவுந்
தாயார்தான் கண்டிலளோ தான். (உகரு)

கு-பு. சோற்றுப்பொருக்கு - சோற்றுப்பற்று பட்டைபோற் காய்ந்து வெடித்தது. கண்டிலையோ என்றும் பாடம்.

திருக்கண்ணமங்கை நம்பியாரைப் பாடியது:—

வெண்பா

தருக்குலவு கண்ணமங்கைத் தானத்தா ரெல்லாந்
திருக்குளத்து மீனொழியத் தின்றார் — குருக்கொடுக்கும்
நம்பிமா ரென்றிருந்தோம் நாட்டி லழிகூத்தித்
தம்பிமா ராயிருந்தார் தாம். (உகசு)

கு-பு. திருக்கண்ணமங்கை தஞ்சாவூர் ஜில்லா நன்னிலந் தாலுகாவில் திருவாரூரிலிருந்து மேற்கே குடவாசல்போகுஞ் சாலையிலுள்ளது. தானத்தார் - ஸ்தானிகர். குரு - பெருமை. உருக்கொடுக்கும் என்றும் பாடம்.

கண்ணபுரந் தீத்தாளைப் பாடிய வசை :—

வெண்பா

கந்த மலரயனூர் கண்ணபுர மின்னாருக்
கந்தவிள நீரைமுலை யாக்கினார் — சந்ததமுந்
தோற்றமுள தீத்தாட்குத் தோப்பை முலையாக்கினார்
ஏற்றமெவர்க் காமோ வினி. (உகஎ)

கு-பு. கண்ணபுரம் - மேலே கஅச - ம் பாட்டின்கீழ்க் குறிப் புப் பார்க்க. தீத்தாள் - ஒரு தாசி. தோப்பை - தோற்பை.

குடவாசல் விண்ணாள் தானே வசை பாடச் சொல்லப் பாடிய கவி :—

கட்டளைக் கலித்துறை

செக்கோ மருங்குல் சிறுபய றோதனஞ் சிக்களகம்
வைக்கோற் கழிகற்றை யோகுழி யோவிழி வாவிதொறுங்
கொக்கேறி மேய்குட வாசல்விண் ணாள்வரைக்கோம்பியன்னீர்
எக்கோ படைத்தது நீரே நெருப்பி லெரிந்தவரே. (உகஅ)

கு-பு. குடவாசல் - தஞ்சாவூர் ஜில்லா நன்னிலந் தாலுகாவி லுள்ளது. விண்ணாள் - ஒரு தாசி. கோம்பி - ஓணான்.

புலிக்குட்டிச் சிங்கனைப் பாடிய வசை :-

விருத்தம்

போன போன விடந்தொ றுந்தலை
பொட்டெ ழுப்பிறர் குட்டவே
புண்ப டைத்த மனத்த னாகிய
பொட்டி புத்திர னத்திரன்

மான கீன னிலச்சை கேட
னொழுக்க மற்றபு மூக்கையன்
மாண்ப னும்புலிக் குட்டிச் சிங்கன்
வரைக்கு ளேறியி றங்குவீர்
பேனு மீரு மெடுக்க வோசடை
பின்னி வேப்பெணெய் வார்க்கவோ
பிரிவி ழிக்கரி யெழுத வோவொரு
பீறு துண்டமு டுத்தவோ
கான கந்தனில் வைக்க வோவிரு
கால்வி லங்கிடு விக்கவோ
கற்க ரங்கொடு சாட வோவொரு
காரி யந்தனை யேவுமே. (உகக)

கு-பு. பொட்டி - அறிவில்லாத பெண்; மலையாளம்.

முச்சங்கம் திருவிளையாட்டு மதுரைச் சொக்கர் எல்லா மடங்கப் பாடிய கவி :—

வெண்பா

நூலார்நா லாயிரநா னூற்றுநாற் பத்தொன்பான்
பாலார்நா னூற்றுநாற் பத்தொன்பான் - மேலார்நாற்
பத்தொன்பான் சங்கமறு பத்துநா லாடலுக்குங்
கத்தன் மதுரையிற்சொக் கன். (உஉ0)

கு-பு. இதில் முதல் இடை கடைச்சங்கங்களிலிருந்தார் தொகை முறையாகக் கூறப்படவில்லை. முதலடியில் நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்ப தென்பது முதற்சங்ககாலத்துப் பாடினார் தொகை. இரண்டாமடியில் நானூற்று நாற்பத்தொன்ப தென்பது கடைச்சங்ககாலத்துப் பாடினார் தொகை. பின்னர் நாற்பத்தொன்ப தென்பது கடைச்சங்கமிருந்தார் தொகை. முச்சங்கத்தும் இருந்தார் பாடினார் முதலியவர்கள் தொகையை இறையனாரகப்பொருளுரையிற் காண்க.

திருமலைராயன் சபைக்கெழுதி விடுத்த கவி :—

விருத்தம்

தூதஞ்சு நாழிகையி லாறுநா ழிகையினிற்
பல்சந்த மாலைசொலவுஞ்
சூழுலா வந்தாதி யேழுநா ழிகையினிற்
றொகைபெற வகுத்தோதவும்
பாதஞ்செய் மடல்கோவை பத்துநா ழிகையினிற்
பரணியொரு நாண்முழுதுநீள்
பாரகா வியமெலா மீரிரு தினத்தினிற்
பகரக்கொ டிக்கட்டினேன்
சீதஞ்செ யுந்தொங்கன் மார்பினு னியலிசை
தெரிந்ததிரு மலைராயன்முன்
சீறியே வாதுகவி பாடுதற் கெதிர்வருந்
திருட்டுக்க விப்புலவரைக்
காதும்பி டித்துக் கவித்துக் கதுப்பிற்
கரத்திட்ட டித்துமுதுகிற்
கலனைவைத் தேழுக் கடிவாள மிட்டேறு
கவிகாள மேகநானே. (உஉக)

கு-பு. தூது, பல்சந்தமாலை, உலா, அந்தாதி, மடல், கோவை, பரணி, காவியம் என்பன நூல் விகற்பம். இவற்றின் இலக்கணங்களை வச்சணந்திமாலை முதலிய பாட்டியல்களிற் காண்க.

அதிமதுர கவிராசன் பாடிய கையறம் :—

வெண்பா

வாசவய னந்தி வுரதா திசையனைத்தும்
வீசு கவிகாள மேகமே — பூசுரனே
விண்டின்ற வெவ்வழலில் வேவதோ பாவியேன்
மண்டின்ற பாணமென்ற வாய். (உஉஉ)

கு-பு. நந்தி - நந்திபுரம். மேலே உ0க - ம் பாட்டின் கீழுள்ள குறிப்புப் பார்க்க. மண்டின்றபாணம் - மேலே உ0கூ-ம் பாட்டின் கீழுள்ள குறிப்புப்பார்க்க. கையறம் - கையறு நிலை. கை - செயல்.

## குமாரசரசுவதி

குமார சரசுவதி கிருஷ்ண பூபாலன் ஒட்டியனைச் செயித்தபோது பாடியது :—

வெண்பா

கலிங்க மிழந்துநந்திக் கைச்சங்கந் தோற்று
மெலிந்து கடகந்நழுவ விட்டாள் — மலிந்தமலர்ப்
பொன்னிட்ட மானகிட்ண பூபாலா வுன்றனக்குப்
பின்னிட்ட வொட்டியன்போற் பெண். (உஉங)

கு-பு. குமாரசரசுவதி என்பவர் ஒரு புலவர். இவர் சரிதம் வேறொன்றுந் தெரியவில்லை. பாலசரசுவதி என்பதுபோல் குமாரசரசுவதி என்பதும் பட்டமா யிருக்கலாம்.

இப்பாட்டு விஜயநகரத் தரசரான கிருஷ்ணதேவராயர் ஒட்டரதேசத் தரசனாகிய பிரதாபருத்திர தேவனை வென்றதையும் பின்னா அவனோடு சந்தி செய்துகொண்டு அவன் மகளை மணமுடித்ததையும் கூறுகின்றது.

கிருஷ்ணதேவராயர் நரசிம்மராயரின் இரண்டாம் புதல்வர். இவர் கி. பி. 1509-ல் பட்டத்துக்கு வந்து கி. பி 1530 வரை அரசு புரிந்தவர். விஜயநகரத் தரசர்களுள் இறைமாட்சி, கல்வி, ஆண்மை, கொடை முதலியவற்றால் சிறந்து விளங்கியவர் கிருஷ்ணதேவராயரே. இவர் காலத்தில் விஜயநகர ராச்சியம் பெருஞ் சிறப்புற்று விளங்கியது. இவர் புலவர்களை ஆதரித்தது மன்றித் தாமுமொரு புலவராய் விளங்கினர். தெலுங்கிலுள்ள ஆமுக்தமால்யதா என்னும் நூல் கிருஷ்ணதேவராய ரியற்றியது. கிருஷ்ணராய விஜயம் முதலிய நூல்கள் இவர் வீரப்பிரதாபங்களை எடுத்துக் கூறும். தென்னாட்டில் வழங்கும் இராயர் அப்பாஜி கதைகளில் வரும் இராயர் இவரே ; அப்பாஜி என்பவர்

இவர் மந்திரி திம்மப்பர். கிருஷ்ணராயர் தென்னாட்டிலுள்ள பல தேவாலயங்களையும் தரிசித்து அவைகளுக்குப் பூதானம் சொர்ணதானம் முதலிய வழங்கியது மன்றி மண்டபம் கோபுரம் முதலியவும் கட்டி வைத்தனர்.

பிரதாப ருத்திரதேவன் ஒட்டர தேசத்தைக் கி. பி. 1504 முதல் கி. பி. 1532 வரை ஆண்டவன். புருஷோத்தம தேவன் பின் பட்டத்துக்கு வந்தவன்.

இப்பாட்டுச் சிலேடை. பிரதாபருத்திரனைப்போல அவன் மகளும் கலிங்கத்தை இழந்து கைச்சங்கத்தைத் தோற்றுக் கடகத்தையும் நழுவ விட்டாள் எனகின்றது. பிரதாபருத்திரனைக் குறிக்கும்போது கலிங்கம் என்பது கலிங்கதேசம்; கைச்சங்கு என்பது ஒட்டரதேசத்துக் கீழ்க்கரையிலுள்ள ஓரூர். கடகம் என்பது ஒட்டரதேசத்துத் தலைநகர்; அவன் மகளைக் குறிக்கும்போது கலிங்கம் என்பது புடைவை; கைச்சங்கு என்பது முன் கையில் வளையல்; கடகம் என்பது தோள்வளை. கடைசியடியிலுள்ள பெண் என்பது ஒட்டியன் பெண்ணைக் குறியாது பொதுவாக ஒரு பெண்ணைக் குறிக்கின்றது என்றும் கூறலாம்.

அபிராமன் நாலுபாஷையிலும் பாடுகிறவரோ வென்ற போது பாடியது:—

வெண்பா

கூத்தாடி லஞ்சக் கொடுக்கா வரேபேட்டிச்
சோத்தாட்டா வைவேசித் தொண்டனே-ஆத்தான
அந்த விழுப்புரமு மம்பிநக ருங்கெடுக்க
வந்தகுலா மாவபிரா மா. (உஉ௪)

கு-பு. இப்பாட்டும் குமாரசரசுவதியே பாடினது. அபிராமன் என்பவன் விஜயநகரத்து அரசமரபைச் சார்ந்தவனாக, அன்றேல், அவ்விராச்சியத்தில் உத்தியோகம் வகித்தவனாக இருத்தல் வேண்டும்.

லஞ்சக்கொடுக்கு தெலுங்கு; வேசிமகன் என்பது பொருள் அரே - அடே. பேட்டிச்சோத் - மகளைப் பெண்டாள்பவன். ஐவேசி - ஐவேசு, பொருள். குலாமன் - அடிமை. இவை நான்கும் இந்துஸ்தானி. தாட்டன் - இறுமாப்புள்ளவன்; கன்னடம். ஆத்தானம் - ஆஸ்தானம்.

ஆத்தானமாகிய அந்த விழுப்புரம்-சிறந்த வேத்தவை. அம்பிநகர் - விஜயநகரம்; இது பல்லாரி ஜில்லாவி லுள்ளது; அங்கிலபாஷையில் Hampi எனப்படும்.

## தத்துவப் பிரகாசர்

திருவாரூர்க் கொடியிறக்காமற் றகைந்தது :—

வெண்பா

மருவுபுகழ்க் கிட்ண மகாராய ராணை
அரிய வடமலையா ணை — திருவாரூர்ப்
பாகற் கொடியறுப்பார் பாதந் திருவாணை
தியாகக் கொடியிறக்கா தே.

கு-பு. தத்துவப் பிரகாசர் என்பவர் ஒருபண்டாரம். முன்னர் வரும் 237-ம் பாட்டுப்பார்க்க.

கிட்ணமகாராயர் - விஜயநகரத்தரசர் கிருஷ்ண தேவ மகாராயர். மேலே 223-ம் பாட்டின் கீழுள்ள குறிப்புப் பார்க்க.

வடமலையான் என்பவன் இராயருடைய அதிகாரி போலும். கிருஷ்ண தேவராயர் காலத்தில் அறுவன்பாடியில் வடமலையார் என்று ஒருபண்டிதர் இருந்ததாகத் தெரிகின்றது. கி. பி. 1523-ல் இவருக்குச் சோழப்பூண்டி என்னு மூரில் நிலமும் ஒருவீடும் தேவதானமாகப் பிக்ஷாமடத்து விசுவேசுர சிவாசாரியர் கொடுத்ததாக வட ஆர்க்காட்டில் ஆரணித்தாலுகாவில் தேவிகாபுரத்திலுள்ள பிருகதாம்பாள் கோயிலின் முதற் பிரகாரத்து வடக்குச் சுவரிலுள்ள கல்வெட்டொன்று கூறுகின்றது.

பாகற் கொடியறுத்தல் என்பது திருவாரூரில் நடக்கும் பாகல் வேட்டையைக் குறிக்கும். பங்குனி யுற்சவத்தில், தேரினின்று இறங்கிய பின்பு, சுவாமி திருவாரூரிலிருந்து பலிவலத்துக்கு மேற்கேயிருக்கும் வேலங்குடியிலுள்ள மண்டபத்துக்கெழுந்தருளி அதற்கு எதிர்த் தோட்டத்திலுள்ள பாகற் கொடிகளை அறுப்பர். இது அந்தகக்கவி வீரராகவ முதலியார் பாடிய திருவாரூருலாவில் 421-ம் கண்ணியில் "தியாகக் கொடியே தனிவளரச் செய்தொரு நாட் - பாகற் கொடியே பலவறுப்பானை" என்று குறிக்கப்பட்டுளது. 'பாகற் கொடியறுப்பார் பாகர் திருவாணை' என்றும் பாடம்.

தியாகம் என்பதின் ஓகரம் குற்றியலிகரம்.

கிருஷ்ணராயருக் கெழுதி விடுத்த பாட்டு:—

வெண்பா

ஊழித் துலுக்கல்ல வொட்டியான் றானுமல்ல
வீழித் துலுக்குவந்து மேலிட்டு — வாழி
சிறந்ததிரு வாரூரத் தியாகருடை பூசை
இறந்ததே கிட்டணரா யா.

கு-பு. ஊழித்துலுக்கு என்றது விஜயநகர ராச்சியம் தலையெடுத்தற்குமுன் தென்னாட்டின்மேற் படையெடுத்து வந்து கொள்ளையடித்த மாலிக்காபூர் முதலிய துலுக்கரை. ஒட்டியானென்றது பிரதாபருத்திர தேவனை. இவர்கள் கிருஷ்ணதேவராயர் பட்டத்துக்கு வருமுன் தென்னாட்டின்மேற் படையெடுத்துச் சென்று ஊர்களை அழித்தவர். வீழித்துலுக்கு என்றது திருவீழிமிழலையிலிருந்து வந்து திருவாரூரில் அருச்சகர்களாயிருந்த பட்டர்களை. அடுத்த பாட்டைப் பார்க்க. இவர்கள் துலுக்கரை யொத்த குணத்தினராயிருந்தமையின் துலுக்கரெனப்பட்டார். வீழியார் திருவாரூர்க் கோயில் நிர்வாகர்களாகிய உள்துறைப் பகுதியாருள் ஒரு பகுதியார் என்ப.

இதுகேட்டு ராயர் சிரிபட்டரை மாற்றிய போது பாடியது:—

வெண்பா

உண்ட வயிற்றி லுமிக்காந்த லிட்டதே
தொண்டரே வீழ்த் துலுக்கரே — பண்டெல்லாம்
அப்ப மவலெள் ளதிரசமுந் தோசைகளுங்
கப்புவதும் போச்சே கவிழ்ந்து. (உஉஎ)

கு-பு. சிரிபட்டர் - ஸ்ரீபட்டர். உமிக்காந்தல் - எரிந்து தழலாயிருக்கும் உமி. காந்தல் - எரிதல். கப்புதல் - மொக்குதல், உண்ணல். கவிழ்ந்து போச்சு என்க.

சாளுவ நாயக்கர் படுத்துக்கொள்ளச் சொன்னபோதுபாடிய கவி:—

வெண்பா

மூட்டை கலம்புழுதி முக்கலஞ் சுத்தப்பாழ்
வீட்டை விடுதியாய் விட்டாயே — போட்ட
தடுக்கெல்லாம் பீறல் தலையணையேல் வைக்கோல்
படுக்கலா மோசொல்லப் பா. (உஉஅ)

கு-பு. சாளுவநாயக்கர் - இவர் சரிதமும் ஒன்றும் தெரியவில்லை. இவரும் விஜயநகரத்தரசரது அதிகாரியாதல் வேண்டும். சாளுவநாயக்கன் பட்டினமென்று இவர் பெயரால் ஒரு பட்டினம் தஞ்சாவூர் ஜில்லா பட்டுக்கோட்டைத் தாலுகாவில் கடலோரத்திலுளது.

மூட்டைப்பூச்சி கலம்; புழுதி முக்கலம் (மூன்றுகலம்) என்க.

இதுகேட்டுத் திருத்தோணியப்பர் பாடியது:—

விருத்தம்

ஆயிரவர் புலவோரி லொருவன் பிரபந்தகவி
யவரா யிரர்க்குளொருவன்
அந்தாதி தூதுலாப் பரணிகோ வைக்கமக
னவரா யிரர்க்குளொருவன்

போயிடம் பெறுநா டகபுரா ணிகனவன்
போலா யிரர்க்குளொருவன்
பொருட்பெருங் காப்பியம் புகல்வாக்கி மற்றவன்
போலா யிரர்க்குளொருவன்

பாயிரந் தருபஞ்ச லட்சண விதானியப்
படியா யிரர்க்குளொருவன்
பரசமய தர்க்கநூல் பகர்வாதி மற்றுமப்
படியா யிரர்க்குளொருவன்

தேயமெண் டிசைபரவு தேசிகோத் தமனத்
திறத்தா யிரர்க்குளொருவன்
சிவனைத் துதித்துண் டுடுத்துக் கொடுத்திடுந்
தெய்வச் சிவக்கியானியே. (உஉ௬)

கு-பு. மேற்பாட்டுக்கும் இதற்கும் ஏதும் சம்பந்த மிருப்ப தாய்த் தெரியவில்லை. ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் முதலிய கவிகள் பாடுவோன் கவி. அரும்பொருள்களைச் செம்பொருணடையவாகச் செய்பவன் கமகன். அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்தங்களைக் கேட்போர் வேட்குமாறு விரித்துக் கூறுபவன் வாக்கி. வாது செய்யுமிடத்து ஏதவும் மேற்கோளும் எடுத்துக்காட்டிப் பிறன்கோள்களை மறுப்பவன் வாதி.

புலவர் ஆயிரவர்க்குள் ஒருவன் பிரபந்தகவி; பிரபந்தகவி ஆயிரவர்க்குள் ஒருவன் கமகன் என்றிவ்வாறு பொருள் பண்ணுக. அவர் - அத்தன்மையர். விதானி - விதிமுறை யறிந்தவன்.

விருத்தம்

குட்டுதற்குப் பிள்ளைப்பாண் டியனு ரில்லை
குறும்பியள வாக்காதைக் குறித்துத் தோண்டி
எட்டினு லறுப்பதற்கு வில்லி யில்லை
இரண்டொன்றாய் மயிரைமுடிந் திறங்கப் போட்டு
வெட்டுதற்குக் கவியொட்டக் கூத்த னில்லை
விளையாட்டுக் கவிப்பாட்டு விரைந்து பாடித்
தெட்டுதற்குத் தமிழறியாத துரைக ளுண்டு
தெல்லடித்துப் புலவரெனத் திரிய லாமே.(உ௯0)

கு-பு. வில்லி - பாரதம் பாடிய வில்லிபுத்தூரர். தெட்டுதல் - வஞ்சித்தல். தெல்லடித்தல் - விளையாடுதல்; தெல் - ஒரு வகை விளையாட்டு. தெல்லடித்தல் வஞ்சித்தலுமாம்.

விருத்தம்

நினைவுகவி சொல்வோ மெனச்சொலிப் பிறர்கவிதை
நினைவினைத் திருடி வையோம்
நீடுலகின் மனிதரைப் பாடிலோ நாமென்று
நீள்வசைகள் பாட வறியோம்
பினையிளைய நாவல ருடன்பங்கு பேசிப்பிர
பந்தங்கள் பாடிக் கொடோம்
பேசுவது தேவார மேயலால் வாய்க்கெளிய
பேய்க்கிரந் தங்கள் பேசோம்
இனிமைதரு பூருவத் துக்குருக் களைமறந்
தெட்டிடத் துத்தீட் சைபோய்
இட்டசிறு பேர்மாற்றி மாதமொரு பேரிட்
டழைக்கநா மிறுமாந் திரோந்
தனியிருந் தெம்மைப் புறங்கூறு வார்பாடு
தணியக் கவிபா டுவோஞ்
சமனூல்க ளைப்பொரு ளெனக்கொளோந் திருஞான
சம்பந்த ரடியர் நாமே. (உ௯௧)

கூத்தனூரப்பன் வாலகோகிலங்கவிகள் எப்படி என்று இராயர் கேட்கச் சொல்லியது:—

கட்டளைக் கலித்துறை

மன்கவி தாவும் பொழிற்கூத்த னூரப்பன் வாய்தலைமன்
தன்கவி தெள்ளிய பால்வால கோகிலந் தானுரைத்த
நன்கவி பாலுக் கிடுசர்க் கரைக்கவி நாங்கள்சொல்லும்
புன்கவி யுப்பொடு காயமென் றேசொல்லிப் போற்றுவரே.

கு-பு. கூத்தனூரப்பன் வாலகோகிலம் என்னுமிவர்களது கவிகள் எப்படி என்று கிருஷ்ணராயர் கேட்க என்க.

கவிதாவும் - குரங்குகள் தாவும். கூத்தனூரப்பன்கவி பால்; வாலகோகிலங்கவி பாலுக்கிடு சர்க்கரை; எங்கள்கவி கறிக்கிடும் உப்பும் காயமும். காயம் கறிகட்கிடும் கூட்டு.

ஒட்டக்கூத்த னென்றொரு புலவன்வரவு அவர் கேட்டுச் சொல்லியது:—

வெண்பா

பறியாரோ நின்வாயிற் பல்லதனைப் பாரோர்
முறியாரோ நின்முதுகின் முள்ளைச் — சிறுகவொரு
மட்டப்பேர் போதாதோ வாக்கிதுவே யானக்கால்
ஒட்டக்கூத் தன்றூ னுனக்கு. (உ௩௫)

கு-பு. பாவோர் என்றும் பாடம். முதுகின் முள் - முதுகெலும்பு. மட்டப்பேர்-அளவானபேர்; தகுதிக்குத் தக்கபேர்.

ஒருவன் புடவைதரப் பார்த்துச் சொல்லியது:—

விருத்தம்

வெற்றிப் பாடுங் குணப்பாடும் வீரப் பாடு மொருகவியில்
தெற்றிப் பாட வதுகண்டு சீநக் கரசர் துகிலீந்தார்
பற்றிப் பார்க்க வதனூடே பலதே வேசர் வீற்றிருந்தார்
சுற்றிப் பார்க்கப்பயப்பட்டுத்தூ ரவைத்துத்தொழு தோமே

கு-பு. தெற்றுதல் - பின்னுதல், கோத்தல். சீநக்கரசர் - ஸ்ரீநக்கராசர். சுற்றுதல் - உடுத்தல்.

உலோபரைப் பாடியது:—

விருத்தம்

குரங்குமாய் நண்டுகெட்டித் தேளுங் கொட்டிக்
குடியாத மதுக்குடித்தே பேயு மேறி
இரங்கவருங் காஞ்சொறியின் பொடியுந் தூவி
இஞ்சிதின்று கொள்ளிபிடித் தெழுந்தாற்போலத்
தருங்கருணை யில்லாத புல்லர் வாழ்வில்
தண்டிகையின் மீதேறிச் சம்பத் தேறிக்
கருங்கைமதக் களிறேறிக் கழுவி லேறிக்
காடேறி நாடேறித் திரிவார் கண்டீர். (உ௬௫)

கு-பு. எரிந்தாற் போல என்றும் பாடம்.

தீயோரைப் பாடியது:—

விருத்தம்

பாம்புகடித் தாலதுவு மீட்க வல்லோம்
பசாசறைந்தா னீறிட்டுப் பார்க்க வல்லோம்
வேம்புகசப் பறக்கறியு மாக்க வல்லோம்
விறல்வேழத் ததிகமதந் தணிக்க வல்லோஞ்
சாம்பொழுது திடமாகப் பேச வல்லோந்
தரணியின்மேற் கல்லாத தொன்று மில்லை
தீம்பரைநல் லவராக்கிக் குணமுண் டாக்கத்
திறமதறி யாமனின்று திகைக்கின் றோமே. ()

தத்துவப்பிரகாச பண்டாரத்துக்கு இலக்கணம் வருமோ என்றபோது பாடியது:—

வெண்பா

கவடிகளா கத்திரியுங் கள்ளர்கா ணன்னூற்
சுவடியிருந் தாவதென்ன சொல்வீர் — குவலயத்துக்
காட்டுக் கெறித்தநிலாக் கண்ணிரண்டு மில்லாதான்
வீட்டுக் கெரித்த விளக்கு. (உ௬௭)

கு-பு. கவடிகள் - கபடிகள். சுவடி - ஏடு. நன்னூற்கருத்த-றியும் ஆற்றலில்லாதாரிடத்து நன்னூற் சுவடியிருத்தல் காட்டி லெறிக்கும் நிலவும் குருடன் வீட்டிலெரியும் விளக்கும் போலும். நீங்கள் நன்னூல் படித்திருந்தும் உங்களுக்கு இலக்கணம் வாராது என்பது குறிப்பு. இவ்வாறு பொருள் கொள்ள அறியாது வீட்டுக் கெறித்த விளக்கு என்று பாடத்தை மாற்றினாருமுண்டு.

## கவிராசபிள்ளை

ஆசுகவிராச சிங்கம் கடிகையாரைப் பாடியது:—

வெண்பா

செந்தமி ழோர்தங்கள் சீபாத தூளிபொர
வந்த புலவோர்தம் மார்பாணி — கந்தன்
அடிகையா ரப்பரவு மாசுகவி ராசன்
கடிகையார் கோலா கலன். (உ௱௩)

கு-பு. இங்கே ஆசு கவிராச சிங்கம் என்று குறிக்கப்பட்ட புலவர் சேறைக் கவிராசபிள்ளை என்பவர். சௌந்தரிய லகரி பாடிய வீரைக் கவிராசபண்டிதர், செங்கோட்டைக் கவிராச பண்டாரம் முதலியோரினின்று வேறு படுத்தற்கு இவர் சேறைக் கவிராசர் எனப்படுவர். இவர் இயற்பெயர் கவிராசரோ வேறோ தெரியவில்லை. விரைவிற் கவிபாடும் ஆற்றலுடையாருட் சிறந்-தமையின் ஆசுகவிராசசிங்கமெனப்பட்டார். வண்ணம் பாடுவதிற் சிறந்தவராதலின் வண்ணக் களஞ்சியம் என்னவும் படுவர். இவர் காஞ்சியாற் கருணீகர். திருக்காளத்தியிலிருந்த செங்குந்தர் மரபி-னராகிய வேங்கடராச முதலியாரால் ஆதரிக்கப் பெற்றவர். முருகக்கடவுண்மீது பக்திமிக்கவர்.

அந்தகக்கவி வீரராகவ முதலியார் தாம்பாடிய சேயூர் முரு-கன்பிள்ளைத்தமிழிலே அம்புலிப்பருவத்தில் வரும் 'தவிராத' என்றற்றொடக்கத்துக் கவியிலே இவர் செய்த சேயூர் முருக னுலாவை எடுத்துக் கூறியிருத்தலால், இவர்காலம் வீரராகவ முதலியார் காலத்துக்கு முந்தியதாகும். இவர் இயற்றிய நூல்கள் திருக்காளத்தி நாதருலா, திருவண்ணாமலையார் வண்ணம், சேயூர்

முருகனுலா, திருவாட்போக்கி நாதருலா முதலியன. இவர்பாடிய திருவண்ணாமலையார் வண்ணம் "சிலைக்காம னுடலெரிய"என்றற் றொடக்கத்தது; அதனை வண்ணத்திரட்டு என்னும் சிறுபுத்தகத் தில் காணலாம்.

கடிகை - கடிகாசலம்; திருக்கடிகை என்று சொல்லவும் படும். இது வைஷ்ணவத் திருப்பதிகள் நூற்றெட்டுள் ஒன்று; வட ஆர்க்காடு ஜில்லா வாலாஜாபேட்டைத் தாலுகாவிலுள்ள சோளங்கி புரத்திலுள்ளது.

கடிகையார் - கடிகை யூரார்; சிலர் கடிகைப் புலவர் என்ப. கோலாகலன்-ஆரவாரஞ் செய்பவன். கடிகையார் புகழைப் பரப் புவன் என்க.

பாண்டியராசா ஆரென்று கேட்டபோது பாடியது—:

விருத்தம்

தென்பா ராளு மறிவிற் குறுமுனி
தெக்கிண கயிலையில்வாழ்
செங்குந் தக்குல வேங்கட ராயன்
றிருவா சற்புலவன்

என்பேர் வண்ணக் கட்சிய தன்றி
யெதிர்த்தவர் மார்பாணி
இந்தத் தேசப் புலவர் மனத்துக்
கிடியென வந்தேன்காண்

உன்பால் யான்வர வாசற்காரர்க்
குத்தா ரம்பண்ணி
உள்ளுக் கென்னை யழைப்பித் தாசி
லுரைக்குங் கவிதைகள்கேட்

டென்பால் வரிசைகள் பரிசில்க ணல்கி
யிரட்சித் திடவேணும்
இராமா சீவல மாறு பாண்டிய
ராச வரோதயனே. (உ௬௩)

கு-பு. தெக்கிணகயிலை - திருக்காளத்தி. வேங்கடராயன் ஒரு பிரபு. வண்ணக்கட்சி - வண்ணக்களஞ்சியம். கட்சி - கூடு. மார்பாணி - மார்பிலணையுமாணி. உத்தாரம் - கட்டளை. ஆசில் - விரைவில். விரைவிற்பாடுவோர் ஆசுகவி எனப்படுவர்.

இங்கே குறித்த சீவலமாறன் இராமபாண்டியன் அதிவீர ராமபாண்டியனுயிருக்கலாம்; அவனுக்கு ஸ்ரீவல்லப தேவன் என்னும் பெயருண்டு. அதிவீரராமபாண்டியன் கி. பி. 1563-ல் முடிசூடினன்.

திருவண்ணுமலையிற் பாடியது:-

கட்டளைக் கலித்துறை

கண்ணூர் மதிக்குங் கவிராச சிங்கங் கடந்துதிரு
அண்ணுமலையப்பர் மேல்வண்ணம் பாடிமுத் தாலத்திகொண்
டெண்ணு யிரமட வார்சூழப் பல்லக்கி லேறிவந்தான்
உண்ணு முலையெல்லன் மூலைக டோறு மொதுங்கினனே.

இது பரமேசுரப் புலவன் பாடியது. (உசு0)

கு-பு. கண்ணூர் - கருதார், பகைவர். வண்ணம் - திருவண்ணு மலையார் வண்ணம். உண்ணுமுலை யெல்லன் - அடுத்தபாட்டுப் பாடிய உண்ணுமுலை எல்லப்ப நயினுர்.

வெண்பா

பாழ்ப்பாய் மடத்துப் பரமாவுன் பாண்கவிதை
கேட்பாரெல் லாம்புத்தி கெட்டபேர்—தோட்பாவும்
ஓணன் விழுந்தாலு முண்டுபரி காரமிது
வாணு ளளவே வரும்.

இது உண்ணுமுலை எல்லப்ப நயினுர் பாடியது. (உசக)

பாழ் பாய் - பாழ் பரந்த. பரமன் - மேல்வந்த 'கண்ணூர்' எனறற்றொடக்கத்துக் கவிபாடிய பரமேசுரப் புலவன். பாண்- பாழ்; தாழ்ச்சியுமாம்.

## அந்தகக்கவி வீரராகவ முதலியார்

கவிவீரராகவன் காஞ்சிபுரத்திலே படித்தபோது கந்தப்புராணங் கச்சியப்பர் பாடியது:—

விருத்தம்

பொங்குதமி ழயோத்தியில்வாழ் தசரதனென்
போனிடத்தும் பூதூர் வேந்தன்
துங்கவடு கன்னிடத்தும் வீரரா
கவரிருவர் தோன்றி னரால்
அங்கொருவ னொருகலைமா னெய்திடப்போய்
வசைபெற்று னவனி பாலன்
இங்கொருவன் பலகலைமா னெய்திடப் போய்க்
கவியினு லிசைபெற் றுனே. (உசஉ)

கு-பு. கவி வீரராகவ முதலியார் செங்கற்பட்டு ஜில்லாவில் பொன்விளைந்த களத்தூருக் கருகிலுள்ள பூதூரிலிருந்த வடுகநாத முதலியாரின் புத்திரன். இவர் இயற்பெயர் வீரராகவ முதலியார்; மிகச் சிறந்த புலவராய் விளங்கினமையில் கவி வீரராகவ முதலியாரென்றும் பிறவிக் குருடரானமையின் அந்தகக்கவி வீரராகவ முதலியாரென்றும் சொல்லப்படுவர். அந்தகர் - குருடர். இவர் குருடராயிருந்தமையால் நூல்களை எட்டில் எழுதிப்படியாது மனத்தில் அவதானித்துப் படித்தனர் என்பது, பின்வரும் 244-ம் கவியில் "கச்சியிலே தன்னெஞ்ச மேடெனக் கற்றுனொருமுத் தமிழையுமே" என்பதனுலும், 251-ம் கவியில் "ஏடாயிரங்கோடி யெழுதாது தன்மனத் தெழுதிப் படித்த வீரகன்" என்பதனுலும் விளங்கும். இவர் காஞ்சீபுரத்திலே கல்வி பயின்று புலமை நிரம்பப்பெற்றுச் சோழமண்டலம், பாண்டிமண்டலம், ஈழமண்டலம் முதலிய இடங்களெல்லாம் சென்று பற்பலவரிசைகள் பெற்றவர். இது பின்னர் 253 - ம் கவியில் "இனிதினிதெனச்சேர சோழபாண் டியர்மெச்சி யிச்சித்த மதுரவாக்கி-ஈழமண் டலமளவு திறைகொண்ட கவிவீர ராகவன்" என்பதனுலும் ஏனையகவிகளாலும் விளங்கும். இவர் காலத்தில் இவர்

குடும்பத்தார் பூதூரை விட்டுக் களத்தூரிற் குடிபுக்கதனால் இவ ரூர் களத்தூர் என்று சொல்லவும் படும். இவர் காலம் ஈழமண் டலத்திலே யாழ்ப்பாணத்தி லரசாண்ட பரராசசேகரன் காலம்.

இவரியற்றிய நூல்கள் திருக்கழுக்குன்றப் புராணம், சந்திர வாணன் கோவை, திருவாரூருலா, சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ் முதலியன.

கந்தபுராணங் கச்சியப்பர் - கந்தபுராணம் பாடிய கச்சியப்ப சிவாசாரியர்.

வீரராகவர் என்பது கவி வீரராகவருக்கும் இராமபிரானுக் கும் பொதுவாய் நின்றது. ஒருகலைமான் - மாரீசனாகிய மாய மான். அவனிபாலன் ஒருகலைமான் எய்திடப்போய் வசைபெற் றான் என்க. எய்திட - முன்னையது எய்ய என்றும் பின்னையது அடைய என்றும் பொருள்படும்.

பரராசசிங்கம் பொற்பந்தங் கொடுத்தபோது பாடி யது:—

வெண்பா

பொங்குமிடி யின்பந்தம் போயதே யென்கவிதைக்
கெங்கும் விருதுபந்த மேற்றதே — குங்குமந்தோய்
வெற்பந்த மானபுய வீரபர ராசசிங்கம்
பொற்பந்த மின்றளித்த போது. (உசரு)

கு-பு. பரராசசிங்கம் - பரராசசேகரன். இவன் முழுப்பெயர் பரராசசேகர சிங்கையாரியன் என்ப. இவன் யாழ்ப்பாணத் தில் பதினாறும் நூற்றாண்டின் நடுப்பகுதியில் அரசாண்டவன். கனக சூரியச் சிங்கையாரியன் புத்திரன். இவன் விஜயவாகு என் னும் சிங்கள வரசனோடு செய்த யுத்தத்தில் சிங்கம்போற் பாய்ந்து யுத்தஞ் செய்தமையின் பரராச சிங்கமெனப் பட்டான் என்ப. பரராச சேகர சிங்கையாரியன் என்பதைத் திரித்துப் பரராச சிங்கம் என்று வழங்கினரென்று கொள்ளல் பொருத்த முடைத்து.

பொற்பந்தம் - பொற்கிழி. மிடியின் பந்தம் - வறுமையின் தொடர்ச்சி. விருது பந்தம் - வெற்றி விளக்கு. வெற்பு அந்தமான - மலையை ஒத்த.

இராமாயணம் அவதானிச்சுச் சொன்னபோது இராசா பாடியது:—

கட்டளைக் கலித்துறை

இன்னங் கலைமகள் கைமீதிற் புத்தக மேந்தியந்தப்
பொன்னம் புயப்பள்ளி புக்கிருப் பாளென்ன புண்ணியமோ
கன்னன் களந்தைக் கவிவீர ராகவன் கச்சியிலே
தன்னெஞ்ச மேடெனக் கற்றொரு ழுத் தமிழையுமே.

கு-பு. இராமாயணச் செய்யுட்களை வாய்ப்பாடமாகச் சொல்லிப் பிரசங்கித்தபோது என்க. இராசா - பரராச சேகரன். அம்புயப்பள்ளி - தாமரைச் சேக்கை.

வண்ணம் பாடியபோது இராசா பாடியது:—

கலிவிருத்தம்

விரகன்முத் தமிழ்க்கவி வீர ராகவன்
வரகவி மாலையை மதிக்கும போதெலாம்
உரகனும் வாணனு மொப்பத் தோன்றிற்
சிரகர கம்பிதஞ் செய்ய லாகுமே. (உசரு)

கு-பு. விரகன் - நிபுணன். வரகவி - சிறந்தகவி. உரகன் - ஆதிசேடன். வாணன் - மாவலி மகன். சிரகம்பிதஞ்செய்ய ஆயிரந்தலையுடைய ஆதிசேடனும், கரகம்பிதஞ்செய்ய ஆயிரங் கரமுடைய வாணசுரனும் வேண்டு மென்பதாம். கம்பிதம்-அசைத்தல்.

சீவிலிபுத்தூரிற் பாடிய கவி:—

வெண்பா

வேசையரே மல்குமூர் வீதியிலார் வந்தாலும்
பேசி வலைவீசிப் பிடிக்குமூர் — ஆசைமயல்
பூட்டுமூர் கையிற் பொருள்பறித்தே யோடுகொடுத்
தோட்டுமூர் சீவிலிபுத் தூர். (உசசு)

கு-பு. சிவிலிபுத்தூர் - ஸ்ரீ வில்லிபுத்தூர். இது இராமநாத புரம் ஜில்லாவிலுள்ளது; ஸ்ரீ வில்லிபுத்தூர்த் தாலுகாவிற்குத் தலைநகராயுள்ளது. இது வைஷ்ணவ ஆழ்வார்களுள் பெரியாழ் வாரும் சூடிக்கொடுத்த நாய்ச்சியாரும் பிறந்தவூர். இங்கே நாய்ச் சியாருக்கும், வடபத்திரசாயிக்கும். கிருஷ்ணசாமிக்கும், வைத் தியநாத சுவாமிக்கும் கோயில்களுள.

அரியலூர் மழவராயன் படி கொடுத்ததற்குப் பாடிய கவி:—

கட்டளைக் கலித்துறை

சேயசெங் குன்றை வருமொப் பிலாதிக்குச் செங்கமலத்
தூயசெங் கண்ண னிணையொப்ப ளேதண் டுழாயணிந்த
மாயன ளக்கும் படிமூன்று கிட்டிணைய மாமழவ
ராயன ளக்கும் படியொரு நாளைக் கிலக்கமுண்டே. ()

கு-பு. அரியலூர் திருச்சிறுப்பள்ளி ஜில்லாவில் உடையார் பாளையந் தாலுகாவிலுள்ளது. இவ்வூருக்குத் தலைவன் மழவரா யன் என்பவன். இவனை இப்போது ஜமீன்தார் என்ப இங்கே குறித்த மழவராயன் பெயர் கிருஷ்ணைய ஒப்பிலாத மழவராயன் என்பது. இவன் வமிசத்தில் வந்த விஜய ஒப்பிலாத மழவராயன் என்பவன் சகம்1664-ம் ஆண்டு துந்துபி வருடத்தில், அஃதாவது கி. பி. 1742-ல், நரசப்பன் என்னும் பிராமணனொருவனுக்குப் பதினைந்துகுழி நிலம் தானங்கொடுத்ததாக அரியலூர்க் கிரு ஷ்ண சுவாமி கோயில் மகாமண்டபத்தின் வடபுறத்திலுள்ள கல்வெட்டொன்று கூறுகின்றது. இதனால் இந்த வமிசத்தார் ஒப்பிலாத மழவராயர் என்று சொல்லப்பட்டார் என்று தெரி கின்றது.

செங்குன்றை - செங்குன்றூர். மாயன் அளக்கும் படி - திரு மால் அளந்த உலகம். இரண்டாவது படி ஒருநாளுணவுக்கு வேண் டிய பொருள். இலக்கம்-லக்ஷம்.

குமார ஒப்பிலாதான் சங்கீதத்தைக் கேட்டுப் பாடியது:—

கட்டளைக் கலித்துறை

வாமொப் பிலாதவன் சேயொப்
பிலாத மழவதிசை
ஆழக் கடல்விட்டு நீபாடுங்
காலத்தரிசெலுங்கால்
நீழற் கவுத்துவ நீத்துச்செல்
வானந்த நீண்மணிதான்
காமொப் பினுநின் னிசைகேட்குங்
காற்கரைந் தேகுமென்றே. (உச அ)

கு-பு. குமார ஒப்பிலாதான் என்பவன் மேற்பாட்டில் வந்த திருக்கண்ணைய ஒப்பிலாத மழவராயன் மகன். இவன் இயற்பெயர் தெரியவில்லை. அரி - திருமால். நீழல் - ஒளி. கவுத்துவம் - திருமால் மார்பிலணிந்துள்ள கௌத்துப மணி; கடலிற் பிறந்தது என்று பொருள். காழ் - வயிரம்.

தீத்தான் சங்கீதத்தைக் கேட்டுப் பாடியது:—

கட்டளைக் கலித்துறை

வாவிய பொற்பரி யாவூரில் வீரையன் மைந்தபஞ்ச
காவியந் தேர்கின்ற தீத்தாசங் கீதத்திற் காவலாதாப்(?)
ஓவிய சாலையெல் லாங்கொல்லி யாமுள் ளூருகும் ரத்னம்
மேவிய கூடமெல் லாந்திரி கூடத்தின் மேற்படுமே. ()

கு-பி. வாவிய போர்ப்பரி என்றும் பாடம். ஆவூர் எவ்விடத்திலுளதென்பது தெரியவில்லை. ஓவியசாலை - சித்திரசாலை. கொல்லி - கொல்லிமலை, கொல்லிப்பாவை எழுதியுள்ளமலை. திரிகூடம் - திரிகூட பர்வதம்; இராவணனுடைய இலங்காநகரமிருந்த மலை. ஒற்றின் மேவிய கூடம் என்றும் பாடம்.

செழியதரையன் பரிசில் கொடுத்தனுப்பின போது சிலபொருள் வேண்டிப் பாடியது :—

கட்டளைக் கலித்துறை

சாலப் பழுத்த மரம்பார்த் தெறிவர்தண் ணீர்சுரக்கும்
ஞாலத் தகழ்வர் கறக்கின்ற வாவைநற் காறளைவர்
நீலக் கடல்விட்டுப் பாலாழி மத்திட்டு நிற்பரென்னீர்
சேலத்து வேந்த னகத்தாகந் தீர்த்த செழியனுக்கே. ()

கு-பு. செழியதரையன் என்பது பல்லவ தரையன், முனைய தரையன் என்பனபோல் வந்ததோர்பட்டப்பெயர். செழியனு டைய தரையன், பல்லவனுடைய தரையன் என்று பொருள் படும்போலும். தரையன் என்பதற்குப் பொருள் விளங்கவில்லை; நிலத்தான் என்னும் பொருட்டுப் போலும். இச்செழிய தரையன் கொங்கு நாட்டிலே சேலத்தி லிருந்தாண்டவன் போலும். இதனை இப் பாட்டில்வரும் 'சேலத்து வேந்தன்' என்பதுங், அடுத்த பாட்டில்வரும் 'தென்பாலை சேலம் செயித்ததா கந் தீர்த்த செழியன்' என்பதும் குறிக்கும். இவன் தாகந்தீர்த்த செய்தி யாதென்பது தெரியவில்லை.

பழுத்த மரத்தில்தான் பழத்துக்கெறிவார்கள்; நீர் சுரக்கும் நிலத்தில்தான் கிணறு வெட்டுவார்கள்;பால்கறக்கின்ற பசுவைத் தான் காலைக்கட்டுவார்கள்; பாற்கடலைத்தான் மத்திட்டுக் கடை வார்கள்; அதுபோலக் கொடுக்கிறவனிடத்துத்தான் பொருள் இரப்பார்கள் என்க. இஃது ஒட்டென்னுமலங்காரம்.

செழியதரையனுக்கு விடுத்த சீட்டுக்கவி :—

விருத்தம்

ஏடாயி ரங்கோடி யெழுதாது தன்மனத்
தெழுதிப்ப டித்தவிரகன்
எதுசொலினு மதுவே யெனச்சொலுங் கவிவீர
ராகவன் விடுக்குமோலை

சேடாதி பன்சிர மசைக்குங் கலாகரன்
திரிபதகை குலசேகரன்
தென்பாலை சேலஞ் செயித்த தாகந்தீர்த்த
செழியனெதிர் கொண்டுகாண்க

பாடாத கந்தருவ மெறியாத கந்துகம்
பத்திகோ ணுதகோணம்
பறவாத கொக்கனற் பண்ணுத கோடைவெம்
படையாய்த் தொடாதகுந்தஞ்

சூடாத பாடலம் பூவாத மாத்தொடை
தொடுத்துமுடி யாதசடிலஞ்
சொன்னசொற் சொல்லாத கிள்ளையொன் றெங்குந்
துதிக்கவர விடவேணுமே. (உ௫க)

கு-பு. சேடாதிபன் - ஆதிசேஷன். கலாகரன் - கலைக்கிருப்பிடமானவன். திரிபதகை குலசேகரன் - கங்கை குலாதிபன்; வேளாளன். தென்பாலை - தெற்கிலுள்ள பாலைக்காடு. கந்தருவம் என்பது இசைக்கும் குதிரைக்கும் பெயர்; ஆகவே பாடாத கந்தருவம் என்பது, பாடாத என்னும் அடையினுல் இசை என்னும் பொருள் நீங்க, குதிரைக்கு வெளிப்படை. எறியாத கந்துகம் முதலியவும் இவ்வாறே குதிரைக்கு வெளிப்படை. கந்துகம் - பந்து. பத்தி - வரிசை. கோணம் - வாட்படை. கொக்கு - கொக்குப்பறவை. கோடை - வேனிற்காலம். குந்தம் - சிறுசவளம், எறிவேல். பாடலம் - பாதிரிப்பூ. மா - மாமரம். சடிலம் - சடை. கிள்ளை - கிளி. கந்துகம், கோணம், கொக்கு முதலிய வெல்லாம் குதிரைக்கும் பெயர். தொடை - மாலை.

தென்பாலை சேலஞ் செழித்ததாகத் தீர்த்த என்றும் பாடம்.

சந்திரவாணன் கோவை பாடியபோது பாடியது :—

விருத்தம்

மின்னு மாளிகை யனந்தை யாதிபதி
சந்திர வாணமகி பாலன்முன்
வீர ராகவன் விடுக்கு மோலைதன்
விருப்பி னுல்வலிய வேயழைத்

துன்னு காவிய மதிற்பெ ருத்ததொரு
கோவை யோதுகென வோதின
னேத மாதமொரு மூன்று மோதியொரு
நாலு மாதமள வாகவும்
இன்ன முந்தனது செவிபி லேற்றதிலை
யென்னி லிந்தவுல கெண்ணுமோ
இராச ராசர்திறை கொள்ளு மென்கவிதை
யிங்கு வந்துகுறை யாகுமோ
தன்னை யென்சொலுவ ரென்னை யென்சொலுவர்
தமிழ்க்குத் தான்மண மல்லவோ
தன்பு கழ்க்குமிது நீதியோ கடிது
தானிங் கேரம்வர வேணுமே. (உநிஉ)

கு-பு. சந்திர வாணனைப்பற்றி ஒன்றுந் தெரியவில்லை. அநந்தை என்பது அநந்தபுரம் என்பதன் திரிபு. அநந்தபுரம் தென் ஆர்க்காடு ஜில்லாவில் விழுப்புரந்தாலுகாவில் விழுப்புரத்துக்குக் கிட்ட உள்ள ஒரூர். இங்கே முற்காலத்தில் ஒரு சிற்றரசன் இருந்தான் என்ப. கோவைபாட மூன்று மாதம் சென்றதென்றும், பாடி முடிந்து நாலுமாதமாயும் அதைச் சந்திரவாணன் கேட்கவில்லை என்றும் பொருள் கொள்க.

எருமை வரவிடப் பாடியது :—

விருத்தம்

இனிதினி தெனச்சேர சோழபாண் டியர்மெச்சி
யிச்சித்த மதுரவாக்கி
ஈழமண் டலமளவு திறைகொண்ட கவிவீர
ராகவன் விடுக்குமோலை
வனிதையர் விகாரமன் மதராச ரூபனம்
மயிலையதி பதிசக்கிர
வாளத்தி யாகிநங் காளத்தி கிட்ணப்ப
வாணனெதிர் கொண்டுகாண்க

கனதமிழ்த் துறையறி மரக்கலங் காதல்கூர்
கன்னிகா மாடநன்னூற்
கட்டுபொற் கொட்டாரம் வாணிசிங் காதனங்
கவிநாட கஞ்செய்சாலை

வினவுசிவ கதையிற் சரக்கறை யெனத்தக்க
வினையே னுடம்புநோயால்
மெலியுமோ மெலியாத வகைபால் பெருத்ததொரு
மேதிவர விடவேணுமே. (உ௫௩)

கு-பு. இத்தீட்டுக்கவி மயிலையாதிபதி காளத்தி கிருஷ்ணப்ப வாணனுக்கு எருமைக்காக எழுதி விடுத்தது. கிருஷ்ணப்பவாணன் சரிதம் தெரியவில்லை. மயிலை - மயிலாப்பூர். காளத்தி - காளத்தி முதலியார். காளத்தி முதலியார் மகன் கிருஷ்ணப்ப முதலியார்.

சக்கிரவாளத்தியாகி - உலகமெங்கும் புகழ்பெற்ற கொடையாளி. கொட்டாரம் - கொட்டகாரம், சாலை. நன்னூற்கொட்டாரம் - புஸ்தகசாலை. வாணி - சரசுவதி. நாடகஞ்செய்சாலை - கூத்தக்களரி. சரக்கறை - பொக்கிஷம். மேதி - எருமை.

திருக்கழுக்குன்றப் புராணம் பாடியபோது பாடியது:—

விருத்தம்

இங்ஙா னிருந்தபேர் புதியபா கம்பண்
டிருந்தபேர் பழைய பாகம்
இருபாக மும்வல்ல லக்கணக் கவிவீர
ராகவன் விடுக்கு மோலை

அன்னதி தானப்பிர வாகன் பிரசங்கத்
தனந்தசே டாவ தாரன்
அகிலப்பிர காசன்திம் மய்ய வப்பய்ய
னகமகிழ்ந் தினிது காண்க

தன்னூரு மோலையும் வரக்கண்டு நாம்வேத
சயிலப்பு ராணத் தையித்
தனைநா ளிருந்தோதி னேமரங் கேற்றுவது
தான்வந்த லாம லில்லை
நன்னுவ லோருட னிதைக்கேட் டெனைச்சோழ
னாட்டுக் கனுப்ப வேண்டும்
நவிலோலை தள்ளாம லேசுக்கிர வாரத்து
நாளிங்கு வரவேண் டுமே. (உருச)

கு-பு. தானப் பிரவாகன்-வரையாதுகொடுப்பவன். சேடன்-ஆதிசேஷன். திம்மைய வப்பையன் யாரென்பது புலப்படவில்லை. கி. பி. 1680 அளவில் செங்கற்பட்டில் ஒரு திம்மைய நாயக்கன் இருந்தாகத் தெரிகின்றது. வேதசயிலம் - திருக்கழுக்குன்றம்.

இப்படி எழுதின தீட்டுக்கவி அநேகமுண்டு. தீட்டுக் கவிக்கு நிரஞ்சன நாதர் பாடியது:—

கட்டளைக் கலித்துறை

தீட்டுக் கவியென்று சொல்வார் சிலரந்தத் தீட்டுக்கவி
காட்டுக் கெறித்த நிலவாகிப் போஞ்செங் கனகரத்னச்
சூட்டுக் கிரீட முடிவேந்த ருற்பத்தி சூறைகொள்ளும்
நாட்டுக் கிலக்யங் கவிவீர ராகவ னற்கவியே. (உருரு)

கு-பு. தீட்டுக்கவி காட்டுக்கெறித்த நிலவுபோற் பயனற்றுப் போம்; அன்றேல், முடிவேந்தர் உற்பத்தியை நாசஞ் செய்யும் என்க.

ஆரூருலாக் கேட்டுப் பரராச சேகரன் பாடியது:—

கட்டளைக் கலித்துறை

புவியோர் பெறுந்திரு வாரூ ருலாவைப் புலவர்க்கெல்லாஞ்
செவியே சுவைபெறு மாறுசெய் தான்சிவ ஞானவனு
பவியே யெனுநங் கவிவீர ராகவன் பாடியநற்
கவியே கவியவ னல்லாத பேர்கவி கற்கவியே. (உருசு)

கு-பு. பரராச சேகரன் - மேலே 243-ம் பாட்டில் குறித்த பரராசசிங்க மென்பவன். இவன் திருவாரூர்த் தியாகர்மீது மிகுந்த பத்தியுள்ளவனென்றும் அடிக்கடி திருவாரூருக்குச் சுவாமி தரிசனத்துக்காகச் செல்பவனென்றும் இவனுக்கங்கொரு மாளிகை இருந்ததென்றும் அங்கிருந்த அந்தப்புரத்துப் பெண்கள் கோயிலுக்குப் போவதற்கு ஒரு கரந்த கற்படைவழி இருந்ததென்றும் சொல்வர். ஆதலால் இத் திருவாரூருலா இவன் வேண்டுகோளின்படி பாடி யிருத்தல்வேண்டும்.

கற்கவி — கல்லாற் செய்தகவி: கவி - கவிந்த வடிவினதாகச் செய்து வாசல் நிலையின்மேல் வைப்பது.

கயத்தாற்றுராசா உலாப் பாடியபோது பாடியகவி:—

வெண்பா

ஒட்டக்கூத் தன்கவியு மோங்கியகம் பன்கவியும்
பட்டப் பகல்விளக்காய்ப் பட்டதே — அட்டதிக்கும்
வீசுங் கவிவீர ராகவனும் வேளாளன்
பேசுங் கவிசேட்ட பின். (உருஎ)

கு-பு. கயத்தாறு - திருநெல்வேலி ஜில்லாவிலே கோயிற்பட்டித் தாலுகாவில் பாளையங்கோட்டையிலிருந்து பதினெட்டு மைல் தூரத்தில் உள்ளது. இப்போதுள்ள ஊருக்கு வடக்கே ஓரழிந்துபோன கோட்டையும் அழிந்துபோன பெருமாள் கோயிலும் சிவன் கோயிலுமுள. இந்தக் கோட்டை வெட்டும்பெருமாள் ராஜா கட்டினதாகச் சொல்லுவர்.

ஒட்டக்கூத்தன் கம்பன் கவிகள் பட்டப்பகல் விளக்குப் போல ஒளிமழுங்கித் தோன்றின. ஒட்டக் கூத்தன் கவிபட்டது; கம்பன் கவிபட்டது என்று தனித் தனி கூட்டி முடிக்க.

விசயராசன் பல்லக்கின்பின் வந்தபோது பாடிய கவி:—

கட்டளைக் கலித்துறை

திருமாலு மீசனும் பின்போயுந் தூது செலத்துணிந்தும்
அருமா தூரியத் தமிழ்வளர்த் தாரவ ரோடுபங்காய்
வருமா மறையவன் பேர்சாதித் தேமிக வண்டமிழ்க்குப்
பெருமான் சிவிகைப்பின் சென்றான் விசயப் பிரமனுமே.

கு-பு. திருமால் பின்போனது காஞ்சியிலே கணிகண்ணன் பின்போனது. ஈசன் தூதுபோனது திருவாரூரிலே சுந்தரருக் காகப் பரவை நாய்ச்சியாரிடத்தில் தூதுசென்றது. மறையவன் - பிரமன். திருமாலோடும் ஈசனோடும் பங்கு போட்டுப் பிரம னும் பின்போனான் என்ன, விசயப் பிரமன் வண்டமிழ்க்குப் பெருமான் சிவிகைப்பின் சென்றான் என்க. 'விசயப்பிரமன்' என்றதனால் இங்கே குறித்த விசயராசன் பிராமணனுதல் வேண்டும்.

இடும்பாவனத்திற் பாடிய கவி:—

வெண்பா

பசிமுடுக நோவதல்லாற் பாழ்வீட்டிற் பாழ்த்த
கொசுகுகடி யாலுங் குமைந்தோம் — மிசையில்
நெடும்பாவம் யாஞ்செய்தா னீரென்ன செய்வீர்
இடும்பா வனநாத ரே. (உ௫௬)

கு-பு. முடுகல் - அணுகல். கொசுகு - நுளம்பு. குமை தல் - குழைதல், வருந்தல். இடும்பாவனம் - திரு இடும்பாவனம் என்னும் சிவஸ்தலம். இது திருஞான சம்பந்த மூர்த்தி நாயனு ரால் தேவாரம் பாடப்பெற்றது; தஞ்சாவூர் ஜில்லாவிலே திருத் துறைப்பூண்டித் தாலுகாவிலே தில்லைவளாகத்திலிருந்து தென் கிழக்கே ஆறுமைல் தூரத்திலுள்ளது.

நாகதேவனைப் பாடியது :—

விருத்தம்

வாயிலொன்று கல்லுமொன்று
நெல்லதான வண்ணமும்
வாடலாக வாறுமாதம்
வைத்திருந்த கத்தரிக்
காயிலுப்பி லாதகஞ்சி
யைக்கலந்த வண்ணமுஞ்
சாம்பொடிந்த தோரகப்பை
கைப்பிடித்த வண்ணமும்
மோயிலாத மீன்கள்வந்து
மொலுமொலென்ற சட்டியும்
மோருதர்க் கிடச்கொணர்ந்த
*    *    *    *
*    *    *    *    *
*    *    *    நாக
தேவனிட்ட வூணைநாம்
மறப்பதில்லை காணுமே. (உகO)

கு-பு. இந்தப்பாட்டில் மூன்றுமடியின் பிற்பாகமும் நான்காமடியின் முற்பாகமுஞ் சிதைந்து விட்டன. வாயிலிட்ட சாதம் ஒன்று கல்லும் ஒன்று நெல்லுமாயிருந்ததன்மை என்க.

சிறையன் தினகரனைப்பாடிய வசை:—

வெண்பா

சிறையன் தினகரனைச் செந்தமிழ்க்கு நல்ல
துறையென்று நாங்கவிதை சொன்னேஞ் - சுறையுண்ணும்
வண்ணமே செய்தான் வரகவிக்கு வண்மை யென்னும்
எண்ணமே செய்தா னிலே. (உருக)

கு-பு. துரை - தலைவன், அரசன். சுரை - கள். வரகவிக்கு வண்மை செய்யவேண்டுமென்று எண்ணினனில்லை என்க.

நந்திய மாணிக்கத்தைப் பாடியது:—

விருத்தம்

மாதாவைப் போற்பிறக்கத் தந்தையைப்போற்
செனிக்கவிந்த வையந் தன்னில்
ஏதேனு மொன்றல்லால் நந்தியமா
ணிக்கமிவ னேற்றம் பாரீர்

*      *      *      *      *      *

*      *      *      *      *

பாகாதி கேசமெல்லாந் தன்றுனைப்
போற்படைத்தான் பதுமத் தானே. (௨௯௨)

கு-பு. இந்தப்பாட்டில் மூன்றுமடி சிதைந்து போய்விட்டது பிறந்தார் பதுமைதானே என்றும பாடம்

கயத்தாற்று ராசா பாடிய கையறம்:—

வெண்பா

இன்னமுதப் பாமாரி யிவ்வுலகத் திற்பொழிந்து
பொன்னுலகிற் பெய்யப் புகுந்ததால் — மன்னும்
புவிவீர ராகமன்னர் பொன்முடிமேற் சூட்டுங்
கவிவீர ராகவமே கம். (௨௯௩)

தோற்று தொளித்திருந்த தூலக் கவிகளெல்லாம்
மேற்று ரகையின் விளங்கியவே — ஏற்றுலுங்
கன்னவ தாரன் கவிவீர ராகவனும்
பொன்னுருஞ் செங்கதிரோன் போய். (௨௯௪)

கு-பு. ஏற்றுலும் - இரத்தல் தொழிலுடையனாயினும், அரசரைப்பாடிப் பரிசுபெறுந் தொழிலுடையனாயினும். கன்னவதாரன் - கன்னனுடைய அவதாரமானவன், கன்னனைப்போல் கொடுப்பவன். தான் ஏற்றுலும் பிறர்க்குக் கொடுப்பவன் என்க.

சடையாண்டியைப் பாடிய வசை:—

விருத்தம்

கொடையாண்ட மன்னரிற் கச்சிநல்லானைக் குறுகியன்றேன்
தொடையாண்ட முல்லைப் புயவரைச் சாரலிற் றுன்னிமுப்பான்
உடையாண் டிருந்து கவிமத மாக்க ளுடன்பொருத
சடையாண்டி கையிற் குசங்காண வாமுத் தமிழ்ச்சிங்கமே.

கு-பு. தொடையாண்ட முல்லைப்புயம் - முல்லைத்தொடையாண்டபுயம், முல்லைமாலை யணிந்த புயம். முப்பானுடையாண்டு இருந்து - முப்பது வருடம் இருந்து. கவிமதமாக்கள் - புலவர்கள். குசம் - தருப்பை.

கள்ளர்நீச்சுடு முன்னையர்மடத்திலிட்ட பூண்மறக்கச் சடைப் பெரிய தேவனுக்கு விண்ணப்பத் தீட்டெழுத வைத்த தெய்வமேதென.

கு-பு. இது ஏடுகளில் இவ்வாறே சிதைந்து காணப்படுகின்றது.

குடந்தைப் பயணந் தவிர்த்து ஒரு தாதி நிமித்தமாயிருந்தபோது பாடியது:—

வெண்பா

மனந்தான் றளர்ந்தார்க்கும் வாயுமுண்டோ கச்சி
அனந்தா புதனு ளகல்வோ ஞ் — சினந்து
வடித்தெடுத்த வேற்சண் மணியிரண்டு கொண்டு
கொடித்தடுத்தா லாரேகு வார். (உதாரன)

கு-பு. ஒருதாதி நிமித்தமாய்க் குடந்தைப் பயணம் தவிர்த்திருந்த போது பாடியது என்க. குடந்தை - கும்பகோணம். அனந்தா - விளி. புதனுள் - புதன்கிழமை. வடித்தல் - கூராக்கல். கொடி - காக்கைக்கும் கொடிபோன்ற பெண்ணுக்கும் சிலேடை.

தமிழ் நாவலர் சரிதை

முற்றிற்று.

# செய்யுண் முதற் குறிப்பகராதி

# பெயரகராதி